# தை தோஷ நிவர்த்தி - பரிகார ஸ்தலமான இராமேஸ்வரத்தில் அமாவாசை திதியில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

அன்புடையீர், அனேக நமஸ்காரம். தலம், தீர்த்தம், மூர்த்தி இவற்றால் சிறப்புக்குரிய பல க்ஷேத்ரங்களில் இராமேஸ்வரம் பெருமைமிக்க புண்ணிய ஸ்தலமாகும். ஸ்ரீ இராமனும், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவும், முனிவர்கள் பலரும் இங்கு வந்து நீராடியதால் இராமேஸ்வரம் க்ஷேத்ரத்திற்கு மென்மேலும் பெருமை உண்டு. இராமேஸ்வரத்தில் அன்னதானம் செய்வதும் ஜபம், ஹோமம், தானம் செய்வதும் அழியாத பலனைக் கொடுக்கும்.

*இராமேஸ்வரத்தில் நீராடி அன்னதானம் செய்தால் கங்கை, யமுனை, சரஸ்வதி நதிகளில் நீராடிய புண்ணிய பலன் ஒருசேர கிடைக்கும். புத்திரப்பேறு உண்டாகும். நாகதோஷம் முதலியன நீங்கும். தை அமாவாசை அன்று அன்னமளிப்பவன் ப்ராணனளிப்பவன் ஆகிறான். இந்த புண்ணிய பூமியில் அன்னமளிப்பவன் மிக்க செல்வந்தராய் பிறப்பான். அன்னதானம் செய்பவனுக்கு போகமும், ஆயுளும், அழகும் பெருகும். பலம், புகழ், கீர்த்தி இவை உண்டாகும்.*

★ தடைபட்ட திருமணம், புத்திர பாக்யம் இவை உண்டாகும் ★ வறுமை அகல ★ கொடிய நோய்கள் நீங்க ★ தொழில் மந்தம் நீங்கி முன்னேற்றம் காண ★ பிரிந்தவர்கள் ஒன்றுசேர ★ நீண்ட ஆயுள், கடன் தொல்லையிலிருந்து விடுதலை ★ மனநிம்மதி பெற ★ பெற்றோர், மூதாதையர் நினைவு நாளில் ★ நீங்கள் நினைத்த காரியம் நிறைவேற நாங்கள் உங்கள் சார்பாக வடை, பாயசத்துடன் அன்னதானமளித்து, பிரஸாதம் அனுப்பி வைக்கிறோம்.

- ★ *சிறிய தொகை, அரிசி போன்ற உணவுப் பொருட்களும் புதிய வஸ்திரங்களும் ஏற்றுக் கொள்ளப்படும்.*
- ★ *ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் 6 மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.*
- ★ *ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் 1 வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.*
- ★ *ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் ஐந்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.*
- ★ *ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு,* **ஸ்ரீராம் பப்ளிகேஷன்ஸ்** *வெளியீடான* **வெற்றி தரும் விநாயகர் வழிபாடு, பகவான் பாபா** *ஆகிய இரண்டு நூல்களும் அனுப்பி வைக்கப்படும்.*
- ★ **ரூ.1000, ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு இராமேஸ்வரத்தில் பூஜிக்கப்பட்ட வெள்ளி டாலர், ஸ்வாமி படம் தை அமாவாசைக்குப் பின்னர் பிரஸாதத்துடன் அனுப்பி வைக்கப்படும்.**

வஸ்த்ர தானம் செய்ய விரும்பும் அன்பர்கள் ஒரு வேஷ்டி, துண்டு, ஒரு புடவை, ரவிக்கைக்கான தொகை **ரூ. 250** சேர்த்து அனுப்பினால், அவர்கள் சார்பாக வஸ்த்ர தானம் செய்து பிரசாதம் அனுப்பி வைக்கப்படும். மனநிம்மதி அன்னதானத்திலும் வஸ்த்ர தானத்திலும் கிடைக்கிறது. இராமேஸ்வரத்தில் **பிறந்த நாள், திருமண நாள்** என நீங்கள் நினைக்கும் நாளில் அன்னதானம் செய்வதற்கு நாங்கள் ஏற்பாடுகளைச் செய்துள்ளோம். ஆகவே நீங்கள் நினைக்கும் தேதியில் அந்தணர்களுக்கும், சாதுக்களுக்கும், ஏழை எளியவர்களுக்கும் அன்னதானம், வஸ்த்ர தானம் செய்யலாம்.

நன்கொடை அனுப்பும் அன்பர்கள் **GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST, CHENNAI-41** என்ற பெயரில் **CHEQUE/D.D./M.O.** மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். புனிதமான அன்னதான ஸேவையில் மனப்பூர்வமாக செயலாற்றும் எமது பணிக்கு உங்களது மேலான ஒத்துழைப்பை என்றென்றும் நாடுகிறோம்.




*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*

## கோபுர தரிசனம் அன்னதான அறக்கட்டளை
## GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST

**M-11/F-4, RAGAM APTS., I MAIN ROAD, THIRUVALLUVAR NAGAR, THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA**

☎: (044) 24900303, 24900603, 24416122 Mobile : 94441 16300, 94443 19300


தை அமாவாசைக்கு நேரில் வர விரும்புபவர்கள் முன்பதிவு செய்து கொள்ளவும்.

# 56!

டிசம்பர் 12- சூப்பர் ஸ்டார் ரஜினிகாந்தின் ரசிகர்களுக்கு உண்மையான தீபாவளி... சந்திரமுகி வெற்றி சிவாஜி ஷூட்டிங் ஆரம்பம்... இந்த இரண்டுக்கும் இடையில் ரஜினியின் 56வது பிறந்த நாள்...

இதெல்லாம் போதாதென்று 'சிவாஜி' பட பூஜையில் முன்பை விட இளமையாக, தனுஷுக்கு ஜூனியர் போல துள்ளிக் குதித்து வந்தால் ரசிகர்களின் உற்சாகத்துக்குக் கேட்கவும் வேண்டுமா...

வேறென்ன, எல்லாம் கேரள ஆயுர்வேத சிகிச்சைதான். ஆமாம் இப்படித்தான் 'பாபா'வுக்கு முன்னரும் கூறப்பட்டது. ஆனால் இந்த முறை உண்மையாகவே கேரளா சென்று வந்திருக்கிறார் ரஜினி. ஆக, ஸ்க்ரீனில் ஜொலி ஜொலிக்கப் போறார்.

அதே மகிழ்ச்சியோடு ஹைதராபாத் பிலிம்சிட்டியில் ஸ்ரேயாவுடன் ஒரு டூயட் ஆடிப்பாடுகிறார் ரஜினி. 'சிவாஜி'க்காக. ஆம்... டூயட்டுடன்தான் 'சிவாஜி' ஷூட்டிங் ஆரம்பம்.

"என்னப்பா இது... ரஜினி பர்த்டேன்னு ஆரம்பிச்ச மேட்டர் 'சிவாஜி' பக்கம் போகுதேங்கறீங்களா... இன்னிய தேதிக்கு 'சிவாஜி'தான் ரஜினி... ரஜினிதான் 'சிவாஜி'. ஓ.கேவா.

'சிவாஜி'க்காக இயக்குனர் ஷங்கரின் முன்னாள், இந்நாள் உதவி இயக்குனர்கள் அனைவரும் இணைந்து பணியாற்றுகிறார்கள். இதற்கு முன்னர் பாசிலின் 'மணிச்சித்ரதாழ்' படத்துக்குத்தான் அவருடைய முன்னாள், இந்நாள் உதவி இயக்குநர்கள் (இயக்குநராகிய பிறகும்) பணியாற்றினார்களாம். ஆக தமிழில் இதுதான் முதல் முறை.

இந்தப் படத்தில் ராஜ்கிரணுக்கு கண்டிப்பாக ஒரு கனமான பாத்திரம் இருக்கிறது... அது அப்பா கேரக்டரா அல்லது வில்லன் கேரக்டரா என்பதுதான் புதிர்... ஒருவேளை வில்லன் கேரக்டர் கிடைக்கும் பட்சத்தில் அந்த அப்பா கேரக்டரை வழக்கம் போல ரஜினியே செய்வார் என்கிறார்கள்.

சுஜாதா, 'சிவாஜி'க்கான தனது பணிகள் அனைத்தையும் ஃபாஸ்ட் டிராக்கில் ஏறக்குறைய முடித்து விட்டாராம்.

இதையெல்லாம் விட செம ஹைலைட் மேட்டர் ஒண்ணு இருக்குப்பா... 'சிவாஜி' படத்தை தியேட்டர்ல ரஜினியோட உட்கார்ந்து அவரோட பேரனோ, பேத்தியோ பார்க்கப் போறாங்க... யெஸ்... அதேதான்!

- இரா.முத்துகுமார்

# 'சோ'பித்த மகத்துவம்!




✉ மக்களைச் சுதந்திரமாக வாக்களிக்க விட்டால் நாட்டில் நல்ல மாற்றம் நிகழும் என்பதற்கு பீஹாரில் நடைபெற்ற தேர்தலே சாட்சி. அத்தனை பெருமையும் தேர்தல் கமிஷனையே சாரும்!

**ஸ்ரீவில்லிபுத்தூர், என். சங்கரதாஸ்**

✉ 'என்னுடைய 'மங்கா' சிறு கதையை வெளியிட்டதற்கு நன்றி... ஆனால் என்னுடைய பெயரை 'விஜயபாலன்' என்று வெளியிட்டு விட்டீர்களே!

**உடுமலைப்பேட்டை, விஜயாலயன்**

✉ 'அ 'டெங்கு' கொசுவே!' கட்டுரை படித்தோம். சரியான நேரத்தில் பொருத்தமான கட்டுரையைத்தான் வெளியிட்டு இருக்கிறீர்கள்.

**மொரட்டுப்பாளையம், க.நா. இராஜேஸ்வரன்**

✉ டாக்டர் கிருஷ்ணசாமியின் பேட்டியில் காரமும் இருந்தது; சாரமும் இருந்தது.

**நெய்வேலி, கே.வி.நாதன்**

✉ மறைந்த இசைப் பேரரசி எம்.எஸ்ஸின் மகத்துவத்தை விவரித்த கட்டுரையால் சென்ற இதழ் கல்கி மிகவும் 'சோ'பித்தது!

**அயன்புரம், த. சத்தியநாராயணன்.**

✉ "ஸாரி, கொஞ்சம் ஓவராயிடுச்சு'' என்ற 'உச்சகட்ட' நகைச்சுவையைப் படித்தவுடன் என் மனத்தில் எழுந்தது 'நையாண்டியின் உச்சகட்டம்?' - போட்டுத்தாக்கு பரமுதான்!'

**பெங்களூர், யமுனா ரெங்கநாதன்**

✉ 'மத்தாப்புச் சேலைக்காரி' மண்வாசனையோடு கூடிய யதார்த்தமான கவிதை, எங்கள்

வட்டமேஜை

## புதிய அழகு!

✉ ஸ்டீரியோ டைப் கதைகளிலிருந்து முற்றிலும் மாறுபட்ட கோணம், மாறுபட்ட உத்திகளோடு அமைந்திருந்தது, 'விலங்குகள்' தொடர்.

**திருநெல்வேலி, வி. திலகம்**

✉ அருண்சரண்யாவின் 'விலங்குகள்' அருமை. பெண் மனசுக்குள் இருக்கும் சிடுக்குகளைப் பிரித்த விதமும் குட்டிக்கதைகளும் தொடருக்கு அழகு சேர்த்தன.

**சென்னை, ஜே. துரைராஜ்**

✉ 'விலங்குகள்' தொடர் விறுவிறுப்பாகச் சென்று சுபமாகவும் முடிந்தது மகிழ்ச்சியைத் தந்தது.

**தஞ்சாவூர், ஜி. ராமதாஸ்**

நெஞ்சை அள்ளியது.
**மேலகிருஷ்ணன்புதூர், பிரபாலிங்கேஷ்.**

✉ விருச்சிக ராசி நேயர்களுக்குரிய பலனில் 'பத்திரிகைகளில் பெயர் வரும்' என இருந்தது. நான் இதுவரை எந்தவொரு பத்திரிகையிலும் இது போன்ற குறிப்பைப் பார்த்ததில்லை. என்ன ஆச்சரியம்? அதே இதழின் வட்டமேஜை பகுதியில் என் கடிதம் பிரசுரமாகியிருந்தது மட்டுமல்ல, டிசம்பர் மாத கோகுலம் கதிரிலும்... அந்த வாரம் வந்த தமிழன் எக்ஸ்பிரஸிலும் என் கடிதங்கள் பிரசுரமாகியிருந்தன. இவ்வளவு துல்லியமாக வாரப் பலனைக் கணித்து எழுதும் 'தஞ்சை பரத்வாஜ்'க்கு உளம் நெகிழ்ந்த பாராட்டு.
**சென்னை, நேமத்து ஞானம்**

✉ இளமை கல்கியின் ஜிகுஜிகு எஸ்.எம்.எஸ் படிச்சா, சிரிப்பு குபு குபுன்னு வருதுங்கோ!
**கோவை, ராமு அர்விந்த்**

✉ கிருஷ்ணா எழுதிய 'இருட்டில் ஒரு பெண்' கதையைப் படித்து முடித்தபோது மனம் கனத்துப் போனது.
**ஏற்காடு, ஜெயந்தி சிவகுமார்**

✉ காங்கிரசின் முழுக்கை - அரைக்கைச் சட்டை பற்றிய கேள்விக்கான தராசுவின் பதில் நெத்தியடி!
**திருச்சி, இ. முகம்மது உசேன்**

✉ 'ஜெ'வின் ஓவியங்களும் விலங்குகள் உரையாடும் புதுநோக்குக் கதைகளும் தொடருக்குக் கூடுதல் பலம்.
**நெய்வேலி, கே. சுந்தர்**






# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
கி. ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.390/-
ஆறு மாதம் : ரூ.195/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 63.50யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2060/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

# எம்.ஜி.ஆர் செல்வாக்கா?

எம்.ஜி.ஆர் இறந்து போய் பதினெட்டாண்டுகள் ஆகின்றன. 1987-ல் அவர் இறந்த சமயத்தில் பிறந்தவர்கள் இன்று வோட்டுப் போடும் தகுதியை நெருங்கிக்கொண்டிருப்பார்கள். எம்.ஜி.ஆரை நேரிடையாகப் பார்க்காத புதிய தலைமுறையே உருவாகிவிட்டது. இந்தச் சூழலில் அரசியலில் எம்.ஜி.ஆரின் தாக்கம் தொடர்ந்து இருக்கிறதா? அப்படி இருந்தால் அது எவ்வளவு காலம் நீடிக்கும்? 'இல்லை.... எம்.ஜி.ஆர் ஒரு மேட்டரே இல்லை?' என்ற நிலை உருவாகிக் கொண்டிருக்கிறதா?

"இன்று உலக அளவில் புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆரோடு ஒப்பிடும் வகையில் வேறெந்த நடிகரோ அல்லது அரசியல்வாதியோ இல்லையென்று தைரியமாகச் சொல்லலாம். திரைப்படத் துறையில் புகழின் உச்சியில் இருந்தபோதே அரசியல் துறையிலும் முத்திரையை அழுத்தமாகப் பதித்தவர். நற்பண்புகளைப் பிரதிபலிக்கும் கதாபாத்திரங்களில் மட்டுமே நடித்து தனி இமேஜை உருவாக்கிக் கொண்டவர். தி.மு.கவின் அரசியல் வெற்றிக்கு ஒரு முக்கிய காரணமாக அமைந்த அவர், அந்தக் கட்சியை விட்டு வெளி வந்த பின் புதிய கட்சி துவங்கி தி.மு.கவையே அரசியல் களத்தில் தோற்கடித்தவர். அப்படிப்பட்ட மாமனிதரை இன்றும் நமக்கு நினைவுப் படுத்திக் கொண்டிருப்பவை அவர் நடித்த படங்கள்தான். அவரது படங்கள் இன்றைய இளைய சமுதாயத்தின் மீதும் தாக்கத்தை ஏற்படுத்தி இருக்கின்றன. இதனால்தான் அவர் பெயரைச் சொல்லுகிற, இயக்கம் வாக்குகளை அள்ளுகிறது. இது எவ்வளவு காலத்துக்கு நீடிக்கும் என்று சொல்ல முடியாது. அவர் உருவாக்கிய சின்னத்துக்கு அரசியல்ரீதியாக தோல்வி வந்தாலும், மக்கள் மனத்தில் அந்த மாமனிதருக்கு ஒரு தனியிடம் இருந்து கொண்டேயிருக்கும்" என்கிறார் எம்.ஜி.ஆர் கழகம் என்ற தனி இயக்கத்தை நடத்திவரும் ஆர்.எம். வீரப்பன்.

இப்போது எம்.ஜி.ஆர் படத்தைப் பயன்படுத்தத் துவங்கியிருக்கிறார் புது அரசியல் இயக்கம் கண்டிருக்கும் விஜயகாந்த். இது எந்த அளவுக்கு அவருக்குக் கை கொடுக்கும்?

"எம்.ஜி.ஆர் படங்களைப் போட்டு அரசியலில் ஏற்றம் காணலாம் என்று


• பரிதி இளம் வழுதி


• ஆர்.எம். வீரப்பன்



நியமிக்கப்பட்டு மூன்றாண்டுகள் அவருடன் நெருங்கிப் பழகியவர் இவர். பின்னர் 'நமது எம்.ஜி.ஆர்' பத்திரிகையின் ஆசிரியராக இருந்து ஜெ.வுடனும் இணைந்து பணியாற்றியவர்.

"எம்.ஜி.ஆர் ஜெயலலிதாவைத்தான் அரசியல் வாரிசாக உருவாக்கினார். இப்போது எம்.ஜி.ஆர் உருவாக்கிய இரட்டை இலைச்சின்னத்தை தம் வசம் வைத்துள்ள ஜெயலலிதா, தமக்கென்று தனி இமேஜையும் வளர்த்துக் கொண்டிருக்கிறார். எம்.ஜி.ஆர் பக்தர்கள், ஆதரவாளர்கள், ரசிகர்கள் ஆகியோரின் ஆதரவு தொடர்ந்து அவருக்குத்தான் கிடைக்கும். ஆனால் அது நீடிக்குமா; நிலைக்குமா? என்று சொல்ல முடியவில்லை'' என்கிறார் கணேசன்.

# செல்லாக் காசா?

நினைத்தால் விஜயகாந்த் ஏமாந்துதான் போவார். எம்.ஜி.ஆர் பெயரைப் பயன்படுத்தும் தார்மிக உரிமையைப் பெற்றிருக்கும் ஆர்.எம்.வீ, திருநாவுக்கரசர், பாக்யராஜ் ஆகியோரேகூட தனி இயக்கங்களை வெற்றிகரமாக நடத்த முடியவில்லை'' என்று சொல்கிறார் மூத்த எழுத்தாளரான பி.சி. கணேசன். 1977-ல் எம்.ஜி.ஆர் ஆட்சிக்கு வந்தபோது அவரது அரசில் பொதுஜனத் தொடர்பு அதிகாரியாக

**வி**ஜயகாந்த்தை அவரது ரசிகர்கள் அவரை 'கறுப்பு எம்.ஜி.ஆர்' என்று கொஞ்சிக் கொண்டிருக்கிறார்கள். "காமராஜர், அண்ணா போன்று எம்.ஜி.ஆரும் பொதுவான தலைவர்; அவரது படத்தைப் பயன்படுத்துவதற்கும், அவரது பெருமைகளைப் பேசுவதற்கும் எல்லோருக்கும் உரிமை இருக்கிறது'' என்று சொல்கிறார் விஜய

* பண்ருட்டி ராமச்சந்திரன்



* ஜெயலலிதா



காந்த்.

''எம்.ஜி.ஆர் இல்லை என்ற குறைபாட்டை, விஜயகாந்தின் அரசியல் பிரவேசம் தீர்த்துவிட்டது'' என்கிறார், கட்சியின் அவைத் தலைவரான பண்ருட்டி ராமச்சந்திரன். ''எம்.ஜி.ஆரின் பெயரையும் அவரது சின்னத்தையும் வைத்துக்கொண்டு, எம்.ஜி.ஆர் விரோத ஆட்சியை நடத்தி வருபவர் ஜெ. இதனால் எம்.ஜி.ஆர் தொண்டர்கள் ஏமாற்றமடைந்து விரக்தியில் உள்ளனர். இப்போது அவர்களது நம்பிக்கையைப் பெற்றிருப்பவர் விஜயகாந்த்தான். அவர் எங்கள் இயக்கத்தில் சேருவதற்குத் தயாராகிக் கொண்டிருக்கிறார். ஆனால் அதைத் தடுக்கும்விதமாக 'விஜயகாந்த் அ.இ.அ.தி.மு.கவோடுதான் கூட்டணி சேர இருக்கிறார்' என்ற வதந்தியைக் கிளப்பி விடுகிறார்கள்'' என்கிறார் பண்ருட்டியார்.

கிராமங்களில் இன்றும் எம்.ஜி.ஆர் வாழ்ந்து கொண்டிருக்கிறார். அவர் பெயர் உச்சரிக்கப்படும்போது உற்சாகம் ஊற்றெடுப்பது நிதர்சனம். பிரபல எழுத்தாளர் வாஸந்தி ஒரு சம்பவத்தைச் சொன்னார். '''1996 தேர்தலை 'இந்தியா டுடே' இதழுக்காக நான் கட்டுரை செய்ய சென்றபோது கிராமப்புறத்தில் ஒரு மூதாட்டியிடம் யாருக்கு வோட்டு?' என்றேன். 'எம்.ஜி.ஆர் மவராசனுக்குத்தான்' என்று உடனடி பதில் கொடுத்தார் அந்த மூதாட்டி. 'எம்.ஜி.ஆர் இறந்து போய் ஒன்பதாண்டுகள் (அப்போது) ஆகிவிட்டதே' என்று சொன்னபோது, 'அப்படியா?' என்று அதிர்ந்துபோனார் அந்த மூதாட்டி'' என்கிறார் வாஸந்தி. ''ஆனால் காலம் மாறிக் கொண்டிருக்கிறது. எம்.ஜி.ஆர் படமும், இரட்டை இலைச் சின்னமும் மட்டுமே வெற்றியைத் தேடித் தராது. நல்ல ஆட்சித் திறனும் தற்போது அவசியமாகிறது. கவர்ச்சியான தலைமை, நல்ல ஆட்சித் திறன் இரண்டும் இணைந்தால் வெற்றிக் கனியை பறிக்கும் வாய்ப்பு உண்டு. எம்.ஜி.ஆரின் தாக்கம் தமிழக அரசியலில் இன்னும் ஒரு தலைமுறை வரை இருக்கக்கூடும்'' என்கிறார் வாஸந்தி.

அரசியலில் வெற்றி பெற வேண்டுமானால் எம்.ஜி.ஆர் பெயரை மட்டும் சொன்னால் போதாது. அவரது இரட்டை இலை சின்னத்தையும் உடன் வைத்திருக்க வேண்டும் என்பது பொதுவான கருத்து. ''இது ஒரு வகையில் உண்மையாக இருந்தாலும் 'கருணாநிதி எதிர்ப்பு' என்பதுதான் எம்.ஜி.ஆர் ஏற்படுத்தி வைத்துவிட்டுப் போன அரசியல் அடிநாதம். அதை மிகச் சிறப்பாக செய்து வருகிறார் ஜெ. தனி இயக்கம் கண்ட ஆர்.எம்.வீ, திருநாவுக்கரசர் ஆகியோர் கருணாநிதி எதிர்ப்பைத் தீவிரமாகக் கையாள மாட்டார்கள் என்றுதான் தொண்டர்கள் அவர்களை நிராகரித்தனர். எம்.ஜி.ஆர் வோட்டு வங்கி ஜெயலலிதாவிடமே இருக்கிறது. மிக மோசமாகத் தோல்வியைச் சந்தித்த 1996 சட்டமன்ற தேர்தலிலும்கூட 21 சதம் வாக்குகளை அ.இ.அ.தி.மு.க பெற்றதே''



''சபாவுல பெண்கள் கூட்டம் வழக்கத்தை விட அதிகமா இருக்குதே... எப்படி?''
''எல்லா சீரியல்களோட டைட்டில் சாங்கையும் பாடுறதா பாடகர் ப்ராமிஸ் பண்ணிருக்காராம்!''
- அம்பைதேவா

## மெடிக்கல் மூலை

மாரடைப்பைக் கண்டறிய உதவும் நவீன 64 ஸ்லைஸ் சிடி ஸ்கேன் கருவிகளை அப்போலோ மருத்துவமனை உபயோகிக்கத் தொடங்கியுள்ளது. இதைக் கொண்டு இருதயம் மற்றும் ரத்தக் குழாய்களின் செயல்களைத் துல்லியமாக தெரிந்துகொள்ள முடியும். 2012-ல் இந்தியா இருதய நோயின் தலைநகராக மாறி விடும் அபாயமுள்ளதாம்.

- Rx




என்கிறார் இரா. தங்கதுரை. 'கருத்துக் களம்' என்ற பத்திரிகையின் ஆசிரியரான இவர் எம்.ஜி.ஆர் ரசிகர் என்று சொல்லிக் கொள்வதில் பெருமை அடைகிறார்.

"இன்றிருப்பது எம்.ஜி.ஆரின் விசுவாசிகளின் கூட்டம் அல்ல; அவர் பெயரைப் பயன்படுத்தி வசூல்ராஜாக்களாகச் செயல்படும் வியாபாரிகளின் கூடாரம்தான் அ.தி.மு.க'' என்று தாக்குகிறார் தி.மு.கவின் துணைப் பொதுச் செயலாளரான பரிதி இளம்வழுதி. ''உண்மையான எம்.ஜி.ஆர் பக்தர்கள் இன்றும் இருக்கிறார்கள். ஏழை, எளிய மக்கள் அவரது படங்களைப் பார்த்தே பக்தர்கள் ஆனவர்கள். அவர்கள் எம்.ஜி.ஆரை மனப்பூர்வமாக நினைக்கிறார்கள். ஆனால் அவர் பெயரைப் பயன்படுத்தி ஆட்சிக்கு வந்த ஜெ கூட்டம், அப்பெயரை மறைக்கும் விதத்தில் செயல்படுகிறது என்பதே உண்மை. சட்டமன்றத்தில் ஜெ இருமினாலும் தும்மினாலும் மேஜையைத் தட்டி ஆர்ப்பரிக்கும் அ.இ.அ.தி.மு.க சட்டமன்ற உறுப்பினர்கள் ஜெ தப்பித் தவறி 'இதய தெய்வம் எம்.ஜி.ஆர்' என்று சொல்கிறபோது கைகளைக் கட்டிக் கொண்டு மௌனம் காக்கிறார்கள். இப்போதிருக்கும் ஜெ தலைமையிலான அ.இ.அ.தி.மு.க என்பது ஆட்சியைத் தக்க வைத்துக் கொள்வதற்கு, ஆட்சியைப் பிடிப்பதற்கு, எம்.ஜி.ஆரையும், அவரது சின்னத்தையும் பயன்படுத்திக் கொள்ளும் ஒரு வியாபார நிறுவனம் தான். ஆனால் வரும் தேர்தலில் அவரை வீட்டுக்கு அனுப்புவதில் மக்கள் தெளிவாக இருக்கிறார்கள்'' என்கிறார் பரிதி.

"எம்.ஜி.ஆர் ரசிகர்கள் என்பவர்கள் அ.இ.அ.தி.மு.கவினர் மட்டுமல்ல; வெளியிலும் பெரிய கூட்டம் ஒன்று இருக்கிறது. அந்தக் கூட்டமும் தேர்தலின்போது இரட்டை இலைக்கு வோட்டுப் போடும் கூட்டம்தான்'' என்கிறார் எம்.ஜி.ஆர் ஆராய்ச்சியாளரும் 'இதயக்கனி' என்ற பத்திரிகையின் ஆசிரியருமான விஜயன் ராமகிருஷ்ணன். எம்.ஜி.ஆர் பெயரை வைத்து வோட்டு அறுவடை செய்துவிடலாம் என்று விஜயகாந்த் மனக்கணக்கு போட்டால், அது தப்புக்கணக்காகி விடும்'' என்று அடித்துச் சொல்கிறார் விஜயன் ராமகிருஷ்ணன்.

மக்களைப் பாதிக்கும் முடிவுகளை எடுத்து ஆட்சி நடத்தினால் எம்.ஜி.ஆரின் பெயரும் இரட்டை இலைச்சின்னமும்கூட உதவி செய்யாது என்பது ஜெ.வின் கடந்த கால அனுபவம். எனவே மிக எச்சரிக்கையாகச் செயல்பட்டு காய்களை நகர்த்துகிறார் முதல்வர் ஜெயலலிதா என்பதுதான் இப்போதைய நிலை.

- ப்ரியன்



# எல்லாமே மாறிப்போச்சு!

ஒரு நல்ல நாளில் நாதஸ்வர வாசிப்புக்கிடையே, வங்கி சேர்மன் திறந்து வைக்க 'பீனா பாங்க்' புத்தம் புது கட்டடத்துக்கு கோலாகலத்துடன் இடம் பெயர்ந்தது.

கண்ணாடிக் கதவுகள், முற்றிலும் கணிப்பொறி வசதி, சென்ட்ரல் ஏஸி, சேனல் மியூசிக், உட்கார்ந்தால் ஆளையே விழுங்கும் சோபாக்கள், டிஜிட்டல் டோக்கன் டிஸ்பிளே, ஏ.டி.எம், டிரைவின் பாங்க் என்று சகல சௌகரியங்களுடன் திகழ்ந்தது புது இடம். வழக்கமாகக் கடுகடுவென்றிருக்கும் ஊழியர்கள் கூட சற்று சிரித்த முகமாகவும் சினேக பாவத்துடனும் காட்சியளித்தனர்.

இதற்கெல்லாம் காரணகர்த்தா, கிளையின் சீனியர் மேனேஜர் எஸ்.எம்.தர்! அதாவது எஸ். முரளிதரன் என்ற தன் பெயரை மாடர்னாக மாற்றிக் கொண்டவர். சிறு வயதில் 'பழையதை' சாப்பிட்டு வளர்ந்தாலும் இப்போது அவர் புதுமை விரும்பி. அதி நவீன நோக்குடையவர். வெளிநாட்டு கிளைகளில் பல்லாண்டு பணியாற்றியவர். இந்தக் கிளை பழைய கட்டடத்தில் இயங்கியபோது பொறுப்பேற்றவர்.

இக்கிளையில் எல்லாமே பழைமையாக

ஆர். மாலதி

இருந்ததைக் கண்டு முகம் சுளித்தார். உயரத்தில் ஒட்டடை படிந்த கூரை, நீளமான கம்பியில் தொங்கிய ஹைதர் கால மின்விசிறிகள், அழுக்கான பீரோக்கள், இருட்டான சூழல், சிமிண்ட் தரை, ஓரளவே கணிப்பொறி வசதி என்று கேவலமாக இருந்த கிளையை புது கட்டடத்துக்கு மாற்ற அவர் மேற்கொண்ட முயற்சி ஆறு மாதங்களில் பலனளித்தது. வங்கியின் வர்த்தகத்தை தற்போதைய இருபத்தி ஐந்து கோடியிலிருந்து ஒரு வருடத்தில் ஐம்பது கோடியாக உயர்த்திக் காட்ட வேண்டுமென்ற நிபந்தனையின் பேரில் தலைமை அலுவலகம் இடமாற்றத்துக்கு அனுமதி வழங்கியது. நிச்சயம் அவ்வாறே செய்வதாக வாக்களித்தார் மிஸ்டர் தர்.

அடுத்த சில மாதங்களுக்குப் பிறகு, மிஸ்டர் தர் கவலை தோய்ந்த முகத்துடன் காணப்பட்டார். கிளையின் வர்த்தகம், உயர்வதற்குப் பதிலாக சற்றே இறங்குமுகம் ஆகியிருந்தது. தலைமை அலுவலகம் விளக்கம் கேட்டிருந்தது. கணிப்பொறியைத்

தட்டியதும் எந்தெந்த வாடிக்கையாளர்களின் கணக்கில் அதிக தொகை குறைந்திருக்கிறது என்று காட்டியது. அதில் ஒரு பத்து வாடிக்கையாளர்களின் விலாசங்களுடன் அவர்களைச் சந்தித்து காரணம் அறிய காரில் ஏறினார்.

ஒரு வாடிக்கையாளர் வீட்டில் நுழைந்தார்.

"என்ன சார். டெபாஸிட்டையெல்லாம் வித்ட்ரா பண்ணிட்டீங்க?" என்று கேட்டார்.

"சார், நாங்கள்ளாம் மிடில் கிளாஸ். ரிட்டயராயிட்டு பணத்தை பேங்கில் போட்டுட்டு வட்டி மற்றும் பென்ஷனில் சாப்பிடறவங்கதான் இந்த ஏரியாவில் அதிகம். பேங்க் பழைய இடத்தில் இருந்தபோது சாதாரணமாக இருந்தது. அடிக்கடி வந்து பணம் எடுப்போம், போடுவோம். பழசாயிருந்தாலும் விசாலமான இடம். பெஞ்சுல உக்காந்து பேசுவோம். கிட்டத்தட்ட கல்யாண சத்திரத்துக்குப் போற மாதிரி சந்தோஷமா இருக்கும்யா! இப்ப, எல்லாமே மாறிப்போச்சு.

"புதுசு, மாயாஜாலம் மாதிரி நல்லாத்தான் இருக்கு. ஆனா பழகாத எங்களுக்குப் பிடிபடலை. வாசல்லே விறைப்பா, முறைப்பா, வாட்ச்மேன் நிக்கறாரு. நுழையவே தயக்கமா இருக்கு. கண்ணாடிக் கதவைத் தள்ளிக்கிட்டு உள்ளே நுழைய முடியலை. சோபாவில் உட்கார்ந்தா எழுந்திருக்க முடியலை. என்ன டோக்கன் நம்பர்னு கண்ணு தெரியலை. இது பணக்காரங்க பேங்க், நமக்கு தோதுப்படாதுன்னு எங்களுக்குத் தோணிப் போச்சய்யா, தாழ்வு மனப்பான்மைதான்! அதான் பக்கத்திலே இருக்கிற கோவாப்பரேடிவ் பாங்குல கணக்குத் துவங்கி, எங்க டெபாஸிட்டையெல்லாம் ஒட்டுமொத்தமா மாத்திக்கிட்டோம்" என்றார் அந்த முதிய வாடிக்கையாளர்.

பழைமையென்று எதை ஒதுக்கினோமோ, அது தன்னை ஒதுக்கிவிட்டது என்று அறிந்துகொண்ட தர் தொங்கிய முகத்துடனும் தளர்ந்த நடையுடனும் காரில் ஏறினார். ○

# சிரி... சிரி...



"அந்த டீ.வி தொகுப்பாளினி ரொம்ப சின்சியரா இருப்பாங் கன்னு எப்படிச் சொல்ற?"

"'நல்லா இருக்கீங்களா?'ன்னு போன்ல ஒரு நேயர் கேட்டதுக்கு, 'கை வலி, உடம்பு வலி, காய்ச் சல்'னு புலம்பிட்டாங்க!"

- என். உஷா தேவி



"டீ.வி. சீரியல் நடிகையிடம் அந்த போட்டோகிராஃபர் ஏதோ தப்பா பேசிட்டாராமே?"

"ஆமா... கொஞ்சம் சிரிங்கன்னு சொல்லிட்டார்"

- ஆர். அழகுமுத்து



"உனக்கு டீ.வியில 'மெகா தொடர்'தான் பிடிக்கும்; உன் வீட்டுக்காரருக்கு...?"

"அவருக்கென்ன? 'சாப்பிட வாங்க', 'அறுசுவை நேரம்'- இதெல்லாந்தான் பிடிக்கும்...!"

- தேவந்தி துரைராஜ்

# சீரியல்!

"டீ.வியில் செய்திகள் பார்க்கறதே, பட்டிமன்றம் பார்த்த திருப்தியைத் தருதா? எப்படீங்க?"

"ஆளுங்கட்சி ஆதரவு டீ.வி செய்தியையும், எதிர்கட்சி ஆதரவு டீ.வி செய்தியையும் மாறி மாறிப் பார்ப்பேன்!"

- யமுனா ரெங்கநாதன்





"அந்த மெகா சீரியல் நடிகையின் பெயருக்கு முன் 'இ.இ.புகழ்' என்று போட்டிருக்கிறதே?"

"'இவருக்காக... இவர்' என்று நடிகையை மாற்றும் போது இவரைத் தான் கூப்பிடுவார்களாம்..!"

- சி. நாச்சிமுத்து

"சீரியல்லே நடிச்சு இருக்கேன்னு சொல்றீங்க?"

"ஆமாம் சார்"

"எங்கே ஒரு தடவை அழுது காட்டுங்க போதும்"

- ஜெயந்தி சிவக்குமார்



# "தன்ராஜ் இல்லாமல் ஜெயிக்க முடியாதா?"

இந்திய இளைஞர்களின் கவனமெல்லாம் இப்பொழுது கிரிக்கெட்டின் மீது. ஆனால் சத்தமில்லாமல் சென்னை எழும்பூர் ஹாக்கி ஸ்டேடியம், ஒரு பெரிய சர்வதேச தரப் போட்டிக்குத் தன்னை அட்டகாசமாகத் தயார்படுத்தியிருக்கிறது.

பளபளக்கும் புல்தரை (100சதவிகிதம் செயற்கை) பளிச் ஃப்ளட் லைட்ஸ் என புது மாப்பிள்ளை ஜோரில் ஆஸ்திரேலியா, ஜெர்மனி, ஸ்பெயின், ஹாலந்து, பாகிஸ்தான், இந்தியா போன்ற அணிகள் மோதும் சாம்பியன் ட்ராபிக்காகத் தயாராகியிருக்கிறது. இது பற்றி இந்திய ஹாக்கி பெடரேஷன் செயலாளர் ஜோதிகுமரனிடம் கேட்டோம்.

"இந்த வசதிகளை ஏற்படுத்திக் கொடுத்த தமிழக அரசால் வரும் 10ம் தேதி முதல் சென்னையில் உலகத்தர போட்டி ஒன்று நடக்கிறது. ஆனால் ஒரேயொரு குறை. ஐந்து கோடி செலவில் இத்தனை வசதிகள் ஏற்படுத்திக் கொடுத்திருந்தாலும் பயிற்சி பெற போதிய வசதிகள் இல்லை. இந்தக் குறைகள் வருங்காலத்தில் சரி செய்யப்படும். அதேபோல் இந்தப் போட்டியை தூர்தர்ஷன் ஒளிபரப்பினால் ஹாக்கியின் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவும்" என்றார்.

"கிரிக்கெட் மோகத்திலிருக்கும் சென்னை மக்கள் எப்படி இதற்கு வரவேற்பு அளிப்பார்கள்?"

"ஹாக்கி போட்டிகளுக்கு எப்பொழுதும் சென்னை ரசிகர்கள் அமோக ஆதரவளிப்பார்கள். அனுபவமும் இளமையும் ஒருசேர அமைந்த அற்புதமான அணி நம்முடையது. என்றுமில்லாத அளவுக்கு ஆறு இந்திய வீரர்கள் வெளிநாட்டு லீக் போட்டிகளில் விளையாடி வருகிறார்கள்" என்றவரிடம், "தன்ராஜ் இன்னமும் இந்திய அணியில் விளையாட விருப்பம் தெரிவித்துள்ளாரே" என்றோம். சிறிது டென்ஷனானவர் பின்னர் அமைதியாக,

"இன்னும் எத்தனை நாள்தான் அவரைப் பற்றியே பேசப் போகிறோம்? கங்குலி இல்லாத இந்திய கிரிக்கெட் அணி ஜெயிக்கும்போது, ஹாக்கியால் மட்டும் தன்ராஜ் இல்லாமல் மறுமலர்ச்சி காண முடியாதா?" என்றார்.

• ச.ந.கண்ணன்

படம் : ராஜன்

• ஜோதி குமரன்



அந்தக் கப்பரையெல்லாம்
கிடக்கட்டும்.... முதல்ல
இதை நிரப்புங்க...

நான்காவது மழை
பதினோராயிரம்கோடி

முதல் மழை

இரண்டாவது மழை

மூன்றாவது மழை

## சோம்நாத் சாட்டர்ஜி ஊன்றிய விதை!

ஒவ்வொரு முறை நாடாளுமன்றம் கூடுவதற்கு முன்பும் மக்களவைத் தலைவர் சோம்நாத் சாட்டர்ஜி, ஆளுங்கட்சி - எதிர்கட்சி உறுப்பினர்களை அழைத்துப் பேசி, அவை நடவடிக்கைகளுக்கு ஒத்துழைக்குமாறு கோருகிறார். அவர்களும் "ஆஹா, நிச்சயமாக ஒத்துழைக்கிறோம்" என்று வாக்குறுதி அளித்துவிட்டு, இரண்டாவது நாளே நாடாளுமன்றத்தில் ரகளையும் கூச்சலும் எழுப்பி, அவை ஒத்திவைப்புக்கு வழி செய்கிறார்கள்.

நாடாளுமன்றம் எதற்காக ஏற்பட்டது என்பதே மக்களுக்கு மறந்துபோய்விடும் அளவுக்கு வளர்ந்துவிட்டது இந்த அவலம். குற்றச்சாட்டுகளைச் சுமத்துவதோ, அவை மீது விவாதம் நிகழ்த்துவதோ தவறில்லை. ஆனால், அதனை அவைத் தலைவர் அனுமதியுடன், முறையாக, அதற்கென ஒதுக்கப்பட்ட நேரத்தில் செய்ய வேண்டும். வெற்றுப் பிடிவாதத்துடன் அவையே நடக்கவிடாமல் செய்வதால், தங்களைத் தேர்ந்தெடுத்த மக்களுக்கு இவர்கள் துரோகமிழைக்கிறார்கள்.

மக்களவை என்பது, நாட்டு நிர்வாகத்துக்கான முக்கியமான முடிவுகள் எடுக்கப்பட வேண்டிய இடம். அவ்வாறு முடிவுகள் எடுக்கப்படும் முன் ஆரோக்கியமான விவாதங்கள் நடைபெறுகிற அரங்கம்.

இப்போது இத்தகைய விவாதங்களே நடைபெறுவதில்லை என்பது, நமது நாடாளுமன்ற பாரம்பரியத்துக்கு இழுக்கு என்ப




# கல்கி



2005 டிசம்பர் 18
பார்த்திப மார்கழி 3
மலர் : 64
இதழ் : 20




துடன் நமது நாட்டின் எதிர்காலத்துக்கு மிகப்பெரிய அபாயமும் கூட! எவ்வித விவாதமுமின்றி பல தவறான முடிவுகள், பெரும்பான்மை ஆதரவினால் மட்டுமே அமுலுக்கு வந்துவிடுகின்றன.

உதாரணமாக, ஃப்ரிஞ்ச் பெனிஃபிட் டேக்ஸ் குறித்து என்ன விவாதம் நடத்தப்பட்டது? அனைத்து தரப்பினரையும் அபரிமிதமாகப் பாதிக்கும் இந்த அசுர வரியை விதிக்கும் முன் யார் யோசித்தார்கள்? நாடாளுமன்றத்தில் என்ன விவாதித்தார்கள்? இப்போது இந்த வரியிலிருந்து அரசியல் கட்சிகளுக்கு மட்டும் விலக்கு அளிக்கப்பட இருக்கிறதே, அந்த முடிவு எந்த விவாதத்தின் அடிப்படையில் எடுக்கப்பட்டது?

பொதுத்துறை நிறுவனங்கள் மத்திய தணிக்கை ஆய்வாளரின் தணிக்கைக்கு இனி உட்படமாட்டா என்கிற முடிவு எடுக்கப்பட்டுள்ளதாக இரா.செழியன் எச்சரித்துள்ளார். பொது மக்களின் சொத்து பேரிலான கண்காணிப்பை ரத்து செய்யும் இந்த நடவடிக்கை குறித்து மக்களவையில் என்ன விவாதம் நடந்தது?

நாடாளுமன்ற நடவடிக்கைகளில் இது போன்ற எத்தனையோ முக்கியமான பிரச்னைகள் இடம் பெறுவதேயில்லை.

பணபலமும் ஆள்கட்டும் உள்ளவர்கள் நாடாளுமன்றத்துக்குள் நுழைய முடிகிறது. அவர்கள் தாங்கள் 'போட்ட' பணத்தைத் திரும்ப எடுக்கும் களமாகவே அரசியலைப் பார்க்கிறார்கள். இத்தகைய உறுப்பினர்கள் அறிவுபூர்வமான விவாதங்களில் ஈடுபடுவார்கள் என்று நாம் எவ்வாறு எதிர்பார்ப்பது!

இந்தப் பிரச்னைக்குத் தீர்வுதான் என்ன?

"மக்கள் தேர்ந்தெடுத்து அவைக்கு அனுப்பும் உறுப்பினர்களை, மக்களே திரும்ப அழைத்துவிடும் உரிமை வழங்கப்படவேண்டும்" என்று யோசனை கூறியிருக்கிறார் சோம்நாத் சாட்டர்ஜி. இந்த வழக்கம் ஒரு சில நாடுகளில் அமுலில் இருக்கிறது. ஆனால், ஓர் உறுப்பினரை எந்தெந்த சந்தர்ப்பங்களில் திரும்ப அழைக்கலாம் என்பதெல்லாம் தெளிவுபடுத்தப்பட்டு மிக அசாதாரண சூழல்களில் மட்டுமே அவ்வுரிமையைப் பிரயோகிக்கும்படி அமைக்கப்பட்டிருக்கிறது. நம் நாட்டிலோ, கிரிமினல் பின்னணி உள்ளவர்களுக்கு வாக்களித்துத் தேர்ந்தெடுக்கக் கூடாது




என்கிற பிரக்ஞைகூட இன்னும் மக்களிடையே உருவாகவில்லை. அப்படியிருக்க, தேர்ந்தெடுத்த உறுப்பினரைத் திரும்பப் பெறுவதற்கான அடிப்படைகளைக் குறித்து சிந்திக்கவோ முடிவெடுக்கவோ சராசரி மக்களுக்கு எப்படித் தெரியும்?

தேர்ந்தெடுத்த உறுப்பினரைத் திரும்பப் பெறும் உரிமை என்பது வேறு சில சிக்கல்களுக்கும் வழி வகுக்கும். அரசியல் ரீதியிலான பழிவாங்கல் நடவடிக்கைகளுக்கு அது இடமளிக்கவும் வாய்ப்பு இருக்கிறது.

கிரிமினல் குற்றச்சாட்டோ பின்னணியோ உள்ளவர்கள் தேர்தலில் போட்டியிட முடியாத வகையில் வலுவான தேர்தல் சீர்திருத்தம் கொண்டு வந்தால் போதும்; அத்தகையவர்கள் பணம் பண்ணும் ஆசையுடன் அரசியலுக்குவர இயலாமல் போய்விடும். தகுதியற்ற ஒருவரைத் தேர்ந்தெடுத்து அனுப்புவதும் நிகழாது. அவரைத் திரும்ப அழைக்க வேண்டிய சூழ்நிலையும் ஏற்படாது. இதேபோல், பண பலம் தேர்தலில் செல்லுபடியாகாதவாறும் லஞ்சம் தந்து வோட்டுப்பெற முடியாத வகையிலும் அரசு யந்திரத்தை உபயோகித்து மக்களைக் கவர இயலாதவாறும் தீவிரமாகச் சிந்தித்துச் சட்டங்களை உருவாக்கலாம்.

ஆக, தேவைப்படுவது தேர்தல் சீர்திருத்தம் மூலம் நல்லவர்கள் தேர்ந்தெடுக்கப்பட உதவுவதுதானேயொழிய, தேர்ந்தெடுக்கப்பட்டவரைத் திரும்ப அழைப்பது அல்ல.

ஆனால், பூனைக்கு யார் மணி கட்டுவது? மக்களவைத் தலைவர் சொல்வதை மக்களவையிலேயே மதிக்காதவர்கள், அவர் யோசனைகளை ஏற்று தேர்தல் சீர்திருத்தங்களையா செய்துவிடப் போகிறார்கள்?

எனினும், சோம்நாத் சாட்டர்ஜி இதுபற்றிப் பேச, ஆரம்பித்திருப்பதே ஒரு நல்ல அறிகுறிதான். இதேபோல் பல அறிஞர்களும் தேர்தல் முறை குறித்து இன்னும் பல கருத்துகளும் சிந்தனைகளும் வெளிப்படுத்த வேண்டும். அறிஞர்கள் பேசப் பேச, மக்களிடையே அது குறித்து பிரக்ஞையும் அதிகரிக்கும். மக்கள் விழிப்படைந்தால் அரசியல்வாதிகள் நிச்சயம் வழிக்கு வருவார்கள். சோம்நாத் சாட்டர்ஜி தூய்மைப் புரட்சிக்கான விதை ஊன்றியிருக்கிறார். அது முளைவிட்டு செழித்து வளரட்டும். ○




# மங்களூர் மல்லிகள்!



• எம். எஸ். லாவண்யா, எம்.எஸ்.சுப்புலக்ஷ்மி

எங்களுடைய தாயார் கிரிஜாம்மாவுக்கு எங்களை விட இசைக்கனவுகள் அதிகம். ஒரு சின்ன வீட்டு வேலைகூட எங்களை செய்ய விட மாட்டார். "போய்ப் பாடுங்க; வாசிங்க" என்று துரத்தி விடுவார்.

"'இந்த வாத்தியமெல்லாம் பெண்களுக்குச் சரிப்பட்டு வருமா?... டைம்தான் வேஸ்ட் பண்றீங்க!' என்று எத்தனையோ பேர் கிண்டலடித்த போதெல்லாம், நாங்க மனம் தளர்ந்ததேயில்லை. சாக்ஸஃபோன் இசை மீது அப்படியொரு வெறி! அசராமல் மணிக்கணக்கில் உழைத்ததற்கான பலன் கிடைத்திருக்கிறது.... ஒரு காலத்தில் சென்னையில் தங்க இடம்கூட கிடைக்காமல் கஷ்டப்பட்டிருக்கிறோம். ஆனால், இன்றைக்கு 'சாக்ஸஃபோன் சிஸ்டர்ஸ்' என்று எங்கள் ரசிகர்கள் செல்லப் பெயரே வைத்து விட்டார்கள்" என மகிழ்ச்சி பொங்கச் சொன்னார்கள், மங்களூரைச் சேர்ந்த எம்.எஸ். லாவண்யா, எம்.எஸ். சுப்புலக்ஷ்மி சகோதரிகள்.



• கத்ரிகோபால்நாத்துடன்...

சாக்ஸஃபோன் போன்ற முரட்டு வாத்தியத்தில்கூட மல்லிகைப்பூ போன்ற சங்கதிகளை உதிர்க்க முடியும் என்று நிரூபித்து வரும் இவர்கள், கத்ரி கோபால்நாத்தின் பிரதம மாணவிகள்.

"எங்கள் வாசிப்பை எல்லாம் எங்கள் குருஜி கேட்க வேண்டும் என்று ஆசைப்படுகிறோம். ஆனால் அவருக்கு எத்தனையோ வேலைகள். அதனால் கனடா, ஸ்ரீலங்கா, தென் ஆப்பிரிக்கா என எங்கே கச்சேரி நடந்தாலும், அதை அப்படியே ஒலிப்பதிவு செய்து அவருக்கு அனுப்பிவிடுவோம். குருஜியும் அதைக் கேட்டுவிட்டு, நிறைகுறைகளை விமர்சிப்பார்" என்கிறார் லாவண்யா.

வாத்தியத்தில் மட்டு மல்ல, இன்னொரு விஷயத்திலும் இந்தச் சகோதரிகள் சற்று வித்தியாசமானவர்கள். மற்ற இசைச் சகோதரிகள் போல, இவர்கள் யூனிஃபார்ம் காஸ்ட்யூம் அணிவதில்லை!

- மினி




# ஞானம் தந்தது; நிறைவு தந்தது!

**சுபா முட்கல் பேட்டி**

**சுபா முட்கல், வட இந்தியாவின் மிகப் பிரபலமான பாடகி. இவரது இசை ஆல்பங்கள் பெரிய ஹிட். சாஸ்த்ரிய ஹிந்துஸ்தானி இசையில் தேர்ச்சி பெற்று தனித்தன்மையுடன் நிகழ்ச்சிகள் வழங்குபவர். அண்மையில் சென்னை வந்திருந்த அவரைச் சந்தித்தபோது...**

"என் பெற்றோர்கள் அலகாபாத் பல்கலைக்கழகத்தில் ஆங்கில ஆசிரியர்கள். அவர்கள் இசைக்கலைஞர்கள் இல்லையே தவிர, இசையின் மீது ஆழ்ந்த பற்று கொண்டவர்கள்; ரசனை மிகுந்தவர்கள். அதனால் நாலு வயதிலேயே என்னை கதக் நடனம் கற்றுக் கொள்ளச் செய்தார்கள். கதக்கின் ஓர் அங்கமாக பதினைந்து வயதில், வாய்ப்பாட்டு கற்றுக்கொள்ள வேண்டியிருந்தது. நாளடைவில், எனக்கு நடனத்தைவிட இசை மீது அதிகமான ஆர்வம் ஏற்பட்டது.

இசைதான் எனக்கு வாழ்க்கை. அதில் தான் எனக்கு சந்தோஷம், திருப்தி என்று நான் உணர்ந்து கொண்டேன். ராம் ஆஷ்ரய்ஜா, சந்திர மௌத்கல்யா, வஸந்த் தாகர், ஜிதேந்திரா அபிஷேகி, குமார் கந்தர்வ, நயினா தேவி போன்ற அற்புதமான மேதைகளிடமிருந்து இசை கற்றுக்கொள்ளும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. எனக்காக எந்தவிதமான தியாகமும் செய்ய, ஒத்துழைப்பு நல்க எனது குடும்பம் தயாராக இருந்தது. இசையில் நான் மூழ்கிப் போனேன்.

முதல் முறையாக மேடை ஏறியது எப்போது?

"பரதநாட்டியம் மாதிரி, குறிப்பிட்ட தினத்தில் மேடை ஏறி அரங்கேற்றம் செய்வது இந்துஸ்தானி இசையில் சாத்தியமில்லை. குரு, தனது கச்சேரிகளுக்கு மாணவர்களை உடனழைத்துப் போவார். அப்புறம் தம்புரா மீட்ட வாய்ப்பு அளிப்பார். அடுத்து, தனியாக ஒன்றிரண்டு பாடல்களுக்கு வாய்ப்புக் கிடைக்கும். அப்புறம் குருவுடன் இணைந்து



# பள்ளி விழும் புலி!





ஒவ்வொரு ஆண்டும் இந்தியாவில் சுமார் 10,000 குழந்தைகள் பல்வேறு நோய்களோடு பிறக்கின்றனர். இந்தியாவில் மட்டும் 111 மில்லியன் குழந்தைத் தொழிலாளர்கள் உள்ளனர். 15 மில்லியன் குழந்தைகள் சுகாதார சீர்கேடுகளில் மாட்டிக் கொண்டுள்ளனர். பெருநகரங்களில் மட்டும் 4,14,700 ஆதரவற்ற சிறுவர்கள் சாலைகளில் தஞ்சம் அடைந்துள்ளனர். 6 வயது நிரம்பிய 60 மில்லியன் குழந்தைகள் இன்னமும் பள்ளியில் காலடி எடுத்து வைக்கவில்லை. ஒவ்வொரு மூன்றாவது பெண் குழந்தையும் இளமைப் பருவத்தை எட்டாமலே இறப்பது கொடுமைதான்.

கச்சேரி. அதன் பின்னரே சோலோ. என் விஷயத்திலும் இப்படித்தான் நடந்தது.

**தபலா கலைஞரைத் திருமணம் செய்து கொண்டிருக்கிறீர்களே! காதல் திருமணமா?**

ஆமாம்! இசை மீதான காதல். நாங்கள் ஒருவரை ஒருவர் திருமணத்துக்கு வெகுநாள் முன்பே அறிவோம். எங்கள் இருவரது அலைவரிசையும் ஒரே மாதிரி இருந்தன. இரு வீட்டார் சம்மதத்துடன் திருமணம் நடந்தது. மேடையில் இணைந்து இசை வழங்கிய ஆரம்ப நாட்களில், நாங்கள் இருவரும் வாழ்க்கையில் இணைவோம் என்று துளியும் நினைக்கவில்லை.

**உங்கள் குரலைப் பராமரிக்க என்ன செய்கிறீர்கள்?**

மனிதக்குரல், எவ்வளவுதான் அற்புதமானதாக இருந்தாலும், அதை ஒரு வரையறைக்குள் தான் பயன்படுத்த வேண்டும். இல்லையெனில் அது பாழாகிவிடும். எனவே, மிதமான எண்ணிக்கையில் கச்சேரிகளை ஒப்புக்கொள்வது, ஒரு கச்சேரிக்கும், இன்னொன்றுக்கும் இடையே நல்ல ஓய்வு தருவது என்று பாலிசி வைத்துக்கொண்டிருக்கிறேன். போகிற இடங்களில் நிலவும் தட்பவெப்ப நிலைக்கு ஏற்ப என் உடல் நலத்தைப் பாதுகாக்க நான் தவறுவதில்லை.

**எப்போதும் பளிச்சென்று, சிரித்த முகத்துடன் இருக்கிறீர்கள்! உங்கள் சந்தோஷம் எல்லாருக்கும் தொற்றிக் கொள்கிறதே! இதன் ரகசியம் என்ன?**

இசையில் என்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்கிறேன். எப்போதுமே இசைக்குள்ளே மூழ்கி, சந்தோஷம் அனுபவிப்பதுபோல உணர்கிறேன். அதன் வெளிப்பாட்டைத் தான் என் முகத்தில் காண்கிறீர்கள் என்று நினைக்கிறேன்.

**இசை, உங்களுக்கு வாழ்க்கையில் வெற்றியைக் கொடுத்திருக்கிறதா? சந்தோஷத்தைக் கொடுத்திருக்கிறதா?**

இசை, எனக்கு ஞானத்தைக் கொடுத்திருக்கிறது, நிறைவான வாழ்க்கையைக் கொடுத்திருக்கிறது, வெற்றியையும் கொடுத்திருக்கிறது. இசை இல்லாத வாழ்க்கையை என்னால் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியவில்லை.

சந்திப்பு : **எஸ்.சந்திரமௌலி**

படம் : **கௌதம்ராம்**



# எங்கள் எம்.எஸ்.

டோன்மென்ட் ஸ்டேஷனில் ரயிலை விட்டு இறங்க, அவர்கள் அனைவரும் ரயில் நிலையத்தை விட்டு வெளியேறும் வரை அணி வகுப்பு மரியாதைபோல் காத்திருந்த ரயில்...

இதையெல்லாம் கண்டவர்கள் பாக்கியசாலிகள் - தன்னலமற்ற வாழ்வும் கலையும் எத்தகைய உயர் நிலைக்கு இட்டுச் செல்லும் என்பதற்கான நிதர்சன சான்றுகள் இந்தக் காட்சிகள்.

## டிசம்பர் 11 எம்.எஸ் நினைவு நாள்

"**எம்.எஸ்**ஸும் - சதாசிவமும் கல்யாணத்துக்கு வருகிறார்கள்... நீ வந்து நமஸ்காரம் பண்ணிவிட்டுப் போயேன்..." என்று என் அத்தை அழைத்தார். பள்ளி, பரீட்சை நேரம். படிப்பைச் சற்று ஒதுக்கி வைத்துவிட்டு சைக்கிளை எடுத்துக்கொண்டு எஸ்.ஜி.எஸ் சபா திருமண மண்டபத்துக்குப் போனேன். பிரமிப்பும் வியப்பும் மிக, இருவரையும் நமஸ்கரித்து எழுந்தபோது சதாசிவம் தமக்கே உரிய சற்றே உரத்த குரலில் கேட்டார் "நீ யார்? என்ன செய்துகொண்டிருக்கிறாய்...?"

எம்.எஸ்.ஸை நெருங்க பலரும் தயங்குவதற்குக் காரணம் அவர் பேரில் கொண்ட மரியாதை மட்டும் அல்ல என்பது அப்போதுதான் புரிந்தது. சதாசிவம் கோட்டைச் சுவர் போல் அவரைக் காத்தார்! இந்தத் தேசத்தின் கலைப் பொக்கிஷத்துக்கு அவசியமான பொருத்தமான கோட்டைச் சுவர்! இந்தத் தம்பதியுள் ஒருவரைப் பற்றித் தனித்துப் பேசவோ நினைக்கவோ முடியுமா? இத்தனைக்கும் இருவருமே தனிப்பட்ட நிலையில் சாதனையாளர்கள்தான். அவர்களுடைய தனிப்பட்ட சாதனைகள் வாழ்க்கை தர்மம் என்ற புள்ளியில் இணைந்து இழைந்த அழகை உலகம் எத்தனை பிரமிப்போடு பார்த்தது!

மியூசிக் அகாடமி கச்சேரி முடிந்து வெளியே வரும் அந்தத் தம்பதியை, அப்படியே ஸ்தம்பித்துப் போய் பத்தடி தூரத்தில் நின்று வியக்கும் இசை அன்பர்கள்;

ஆழ்வார்பேட்டை வீனஸ் காலனியில் கச்சேரியின்போது தெருவெல்லாம் பாய் விரித்து அமர்ந்து ஸ்பீக்கரிலிருந்து ஒரு கணத்துக்குக்கூட காதை அகற்றாமல் கேட்ட ரசிகர்கள்;

எம்.எஸ் குழுவினர் பெங்களூர் கன்

என்.விஜய் சிவா



# பாடிக்கொண்டிருப்போம்...

எம்.எஸ்ஸின் இசையை அனுபவித்த எல்லோருமே ஒப்புக் கொள்வார்கள் - அது தன்னலமற்ற கலை வடிவம் என்பதை. யாரையும் மகிழ்விக்கும் நோக்கமின்றி பூரணமான அர்ப்பண உணர்வோடு பாடியதால் அவரால் அத்தனை பேரையுமே மகிழ்விக்க முடிந்தது; நெக்குருகச் செய்ய முடிந்தது.



கர்நாடக இசையுலகில் மேடையேறுவோர் யாருமே எம்.எஸ்ஸையும் அவர் வகுத்துக் கொடுத்த பாதையையும் நன்றியோடு நினைத்துக் கொள்ளாமல் இருக்க முடியாது.

ஆறு மணிக்குக் கச்சேரி என்றால் ஒரு நிமிடம்கூட முன்பின் ஆகாமல் 'டாண்' என்று ஆரம்பித்து விடுகிற சிரத்தை; தம்பூரா சுருதியில் ஸ்வயம்பு ஸ்வரமாக ஜொலிக்கும் அந்தர காந்தாரத்தில் ப்ரணவத்தை (ஓம்) உச்சரித்து கச்சேரியைத் தொடங்கும் அழகு, ஒவ்வொரு கீர்த்தனையிலும் எந்தெந்த இடத்தில் மூச்சு எடுக்க வேண்டும், விட வேண்டும் என்பதைக்கூட தன்வயப்

படுத்திக் கொள்ளும் அளவுக்குப் பயிற்சி செய்து கச்சிதப்படுத்தும் உழைப்பு, head voice, chest voice என தொழில்நுட்ப ரீதியில் குறிப்பிடும் குரல் பிரிவுகளை அனாயாசமாக உபயோகிக்கும் இயல்பான திறன்; இவற்றுடன் குரலுக்கு நளினம் சேர்க்கும் nasality என்கிற அம்சத்தை அளவோடு கலந்து கொடுக்கும் புத்திசாலித்தனம்; மஹான்கள் இயற்றிய கீர்த்தனைகளைத் தவிர எதையும் கையாளக்கூடாது என்கிற கௌரவமான பிடிவாதம்; பக்க வாத்தியம் எப்படி வாசித்தாலும் ஸ்திரமாக சுருதியுடனும் தாளத்துடனும் இணையும் கூர்மை; எண்பத்தொரு வயதிலும் காகிதத்தில் எழுதி வைத்துக் கொள்ளாமல் பாடக் கூடிய ஞாபக சக்தி... இவற்றில் ஓரிரு அம்சங்களை முழுமையாய் அடைந்தால்கூட இன்று ஒரு கலைஞன் பெருமை பட்டுக் கொள்ளலாம்... இவை அனைத்தும் அமையப் பெற்ற ஓர் இசைக் கலைஞரை இன்னும் ஆயிரம் ஆண்டுகளுக்குக் காண முடியுமா என்பது சந்தேகம்தான்!

சங்கீதத்தின் ரகசியங்கள் என்று கருதப்படும் அம்சங்களை எம்.எஸ் தமது கச்சேரி மேடைகளில் அம்பலப்படுத்தினார் என்றுதான் சொல்ல வேண்டும்:

அனுஸ்வரம் முதல் எல்லா ஸ்வரங்களையும் ஸ்ருதியைத் தாரகமாகக் கொண்டு இசைப்பது; கார்வைகளை நன்கு உபயோகிப்பது; பிர்காக்களை அளவோடும் மிருதுவாகவும் கொடுப்பது; தம்பூராவுடன் (எலக்ட்ரானிக் அல்ல) பயிற்சியும் கச்சேரியும் செய்வது; கமகங்களை ரப்பர் பந்து போல் குதிக்க விடாமல் அளவான அசைவுகளோடு நிறுத்திக்கொள்வது; மைக்கைச் சார்ந்து பாடாமல் நாபியிலிருந்து குரலெழுப்பி வாய் விட்டுப் பாடுவது...

- இத்தனையையும் அவர் வாயால் சொல்லாமல் செய்து காட்டியிருக்கிறார்.

'ஹிந்துஸ்தானி கலைஞர்கள் நிறைய சம்பாதிக்கிறார்கள், சினிமாவுக்கும் மேற்கத்திய இசைக்கும்தான் கூட்டம் வருகிறது' என அவ்வப்போது புலம்புகிற கலைஞர்களுக்கு எம்.எஸ்.ஸின் சங்கீதம்தான் ஏற்ற பதில், சமாதானம், வழிகாட்டும் ராஜபாட்டை. 'உன்னையும் உன் சங்கீதத்தையும் நீயே உயர்த்திக்கொள்; மற்றவை தானாக்வே நடக்கும்' என்ற அவரது சித்தாந்தம் அல்லவோ பாட வருகிற ஒவ்வொருவருக்கும் தாரக மந்திரம்!

விஷ்ணு சஹஸ்ரநாமம் இசைத்தட்டா, உடனே கல்கி கார்டன்ஸில் அனந்தராம தீக்ஷிதர் உபன்யாஸம்; பெங்காலி பாடலா, திலிப் குமார் ராய் வருவார் கற்றுத் தர; வடநாட்டு சங்கீதமா சித்தேஸ்வரி தேவி சில வாரங்கள் வந்து தங்குவார்... அந்தந்த நிபுணர்களின் நட்பு, உபதேசம், மேற்பார்வை... யாருக்கு இப்படி ஒரு பாக்கியம் கிடைக்கும்?... கிடைத்தாலும் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமே! சதாசிவம் உருவாக்கிய வாய்ப்புகளை, பாக்கியங்களை எம்.எஸ் நன்கு உபயோகித்துக் கொண்டார்.

'அவர் ஒரு தனிப் பிறவி... அமானுஷ்ய சக்தியால் பாடினார்; சாதித்தார்... நம்மால் முடி

● எம்.எஸ் - சதாசிவம் தம்பதியுடன் விஜய் சிவா



யாதுப்பா...' என்று எம்.எஸ்ஸை உயரத்தில் வைத்துவிடுவது நமக்குத்தான் நஷ்டம். நம்மைப்போல் சராசரி மனிதராகவே வாழ்ந்தார்... ஆனால், தம்மையும் தமது இசையையும் படிப்படியாக முன்னேற்றிக் கொண்டேயிருந்தார். நம்மால் அவர் அளவுக்குச் சாதிக்க முடியாதுதான்; ஆனால் அவர் காட்டிய பாதையில் வெகுதூரம் செல்ல முடியும்... செல்ல வேண்டும்...



* 'கல்கி' கார்டனில் சித்தேஸ்வரி தேவி (இடது ஓரத்தில் எம்.எஸ்)

'நம்மைப்போல் சராசரியா அவர்...?' என்று கேட்பீர்கள்! சில ஆண்டுகளுக்கு முன் "அமெரிக்காவில்..." என்ற வார்த்தையை உச்சரித்ததுதான் தாமதம்... ஆரம்பித்தார் ஆங்கிலத்தில் ஒரு அஷ்டோத்திரத்தை! எந்த காஸெட்/சி.டி யிலும் பதிவு செய்யப்படாத அந்த 'அஷ்டோத்திரம்' ஒஸாமா பின்லேடனுக்கு அவர் செய்த வசை பாடல்! தார்மிக எழுச்சியோடு நாட்டு நடப்பை, உலக நடப்பை விமர்சித்து கவலை கொண்டவர் எம்.எஸ்.

ரௌத்திரம் பழகத் தெரிந்தவர், தமது கடமைகளை இம்மி பிசகாமல் ஆற்றுவதில் ஆனந்தமும் கண்டார் - புத்தாயிரம் ஆண்டு பிறப்பையொட்டி ஒய.ஏ.சி.எம் அமைப்பு 550 பள்ளி மாணவ, மாணவிகளைத் திரட்டி 'மைத்ரீம் பஜத' பாடலைப் பாடச் செய்யத் திட்டமிட்டது. அதற்கான ஒத்திகை நடந்துகொண்டிருந்தபோது 'அடடா! இதை எம்.எஸ் அல்லவா கேட்க வேண்டும்' என்று அவருடன் தொலைபேசியில் தொடர்புகொண்டு வரும்படி கேட்டுக் கொண்டோம். டாக்டர் அப்பாயின்ட்மென்ட் முடித்துக்கொண்டு அவர் வர மதியமாகி விட்டது. காலை எட்டு மணிக்கே ஒத்திகைக்கு வந்துவிட்ட குழந்தைகள் பொறுமையாகக் காத்திருந்தார்கள். அவரைக் கண்டதும் களைப்பை மறந்து பிஞ்சுக் கைகளால் கரகோஷம் எழுப்பி ஆரவாரம் செய்தார்கள். 'நீங்கள் எங்களுக்கும் சொந்தம்தான்' என்று சத்தியப் பிரமாணம் செய்வதுபோல் தோன்றியது அந்த ஆரவாரம்.

எம்.எஸ்.ஸின் முகம் அந்தக் குழந்தைகளின் முகத்துக்கு இணையாக மலர்ந்து பூரித்தது. ஆனால், அந்த மகிழ்ச்சியில் மட்டுமே திளைத்துவிடாமல் அவர் குழந்தைகளைப் பாடச் சொல்லித் திருத்தங்கள் செய்தார். பலமுறை அவர்கள் பாடி தமக்கு ஓரளவு திருப்தி ஏற்பட்ட பிறகே கிளம்பினார்.

அவர் அகன்றதும் அந்தக் குழந்தைகள் கேட்டார்கள்: "எம்.எஸ் எங்களோடு புத்தாயிரம் ஆண்டு நிகழ்ச்சியில் பாடுவாரா...?"

என்ன பதில் சொல்ல...?

அவர் எப்பொழுதும் பாடுவார்... நம்முடன் பாடிக் கொண்டேயிருப்பார்...

அட்டையில் ஓவியம்:
**மணியம் செல்வன்**

தேவகோட்டை ஹைஸ்கூல் வாழ்க்கை இனி இல்லை; மறுபடியும் புதுப்பள்ளி, புது நண்பர்கள், புது சூழ்நிலை... அதைப் பழகிக்கணும். டிபிரிட்டோ பள்ளியை விட்டு நான் வந்துட்டேன். ஆனா என் மனசெல்லாம் அங்கேயே இருந்தது.

தேவகோட்டையிலிருந்து விக்ரமசிங்கபுரத்தில் உள்ள ஸ்கூலில் என்னைச் சேர்க்க நினைத்த அப்பா, என்ன நினைத்தாரோ மனம் மாறி மதுரை தெற்கு வாசல் நாடார் ஸ்கூலில் சேர்த்து விட்டார்.

அப்போது வத்தலக் குண்டுவுக்கு கட்சி மீட்டிங்குக்காக தலைவர் (எம்.ஜி.ஆர்) வரப் போகிறார்னு கேள்விப்பட்டதும் எனக்கு இருப்புக் கொள்ளவில்லை. அவரை எப்படியாவது பார்த்து விடுவது என்ற முடிவோடு முதல் நாளே அங்கே ஆஜராயிட்டேன். நான் முதன் முதலாகத் தலைவரை நேரில் (மரத்தில் ஏறி நின்று தொங்கியபடி) பார்த்தது அங்கேதான்.

சின்னவயசுல இருந்தே நான் அதிகமாகப் பார்த்தது எம்.ஜி.ஆர். படங்களைத்தான். பெரும்பாலும் ஆக்ஷன் படங்களைத்தான் விரும்பிப்



* எழுபது முறை...

பார்ப்பேன். அதுலயும் தலைவர் படம்னா முதல் ஷோ பார்த்துட்டு தான் மறுவேலை. இதற்காக தியேட்டரில் பல ஸ்டண்ட் வேலைகள் செய்வேன்.

நடிகர் திலகம் படமும் பார்ப்பேன். அந்தப் படம் சூப்பரா

# அடங்காத பிள்ளை!

யிருந்தாலும் சுமாராயிருக்குன்னுதான் சொல்வேன். நான் மக்கள் திலகம் ரசிகனாச்சே. தலைவர் நடித்த படம் எப்படியிருந்தாலும் ஒவ்வொரு படத்தையும் பல தடவை பார்ப்பேன். 'எங்க வீட்டுப் பிள்ளை' படத்தை 70 தடவை பார்த்தேன். 'உலகம் சுற்றும் வாலிபன்' 50 தடவை, 'ஆயிரத்தில் ஒருவன்' 40 தடவை, 'அன்பே வா' 30 தடவை பார்த்தேன். நான் குறைந்த தடவை (4 தடவை) பார்த்த படங்கள் 'காதல் வாகனம்', 'தேர்த்திருவிழா'. நான் முழுக்கப் படம் பார்ப்பது என்றாலும் சலிக்காமல் பார்ப்பேன். இப்பவும் இந்த சுபாவம் எங்கிட்டே இருக்கு.



• முப்பது முறை...

மதுரையில் எங்க வீட்டுக்குப் பக்கத்துலதான் சென்ட்ரல் தியேட்டர். 'எங்க வீட்டுப் பிள்ளை' படத்தின் வெற்றி விழா அங்கே நடந்தபோது புரட்சித் தலைவர் வந்திருந்தார். நான் அவரை ரொம்பப் பக்கத்துல பார்க்கும் பாக்கியம் கிடைச்சது அங்கேதான். அந்த தியேட்டருக்குப் பின்பக்க வழியாக எங்க வீட்டைக் கடந்து போனார் தலைவர். 'தலைவா!' என்று குரல் கொடுத்து ஓடிய நான் தடுத்து நிறுத்தப்பட்டேன். மக்கள் திலகத்தின் பக்தனான எனது மிகப் பெரிய மனக்குறை என்ன தெரியுமா? தலைவருடன் சேர்ந்து நின்று போட்டோ எடுத்துக்கொள்ள முடியாமல் போனதுதான்.



• ஐம்பது முறை...

நான் நாடறிந்த நடிகனான பிறகும், அந்த ஆசை நிறைவேறாமல் போனதற்கு பல காரணங்கள் உண்டு. அதில் ஒன்று என் மேல் பூசப்பட்ட தி.மு.க. சாயம். இதுபற்றிப் பிறகு சொல்கிறேன்.

**நா**டார் வித்யாசாலை ஸ்கூலில் ஒன்பதாம் வகுப்பில் என்னைச் சேர்த்து, 'சேட்டைகள் எல்லாத்தையும் கொஞ்ச நாளைக்கு மூட்டை கட்டி வச்சுட்டு ஒழுங்கா படிப்பைப் பாரு'ன்னு சொல்லிட்டுப் போனார் அப்பா.

அந்த ஸ்கூல்ல பாபுங்கற எட்டாங்கிளாஸ் பையனின் கோஷ்டிக்கும் எனக்கும் சின்னச் சின்ன உரசல்கள் வரும். அக்னி நட்சத்திரம் பிரபு - கார்த்திக் மாதிரி முறைத்துக்கொண்டு நிற்போம். எங்கிட்டே ஒரு பழக்கம். வம்பு



விஜயகாந்த் பேசுகிறேன்! 8

சண்டைக்குப் போக மாட்டேன். வந்த சண்டையை விடமாட்டேன். நல்லவனுக்கு நல்லவன். கெட்டவனுக்கு கெட்டவன் என்ற தலைவர் பாலிஸிதான் நமக்கும்.

அந்த பாபுவும் என்னைப் போலவே சேட்டை, லூட்டிக்குப் பேர் போனவனாயிருந்தான். அடிக்கடி உரசிக்கொண்ட நாங்கள் ஒரு கட்டத்தில் நண்பர்களாயிட்டோம். பிற்காலத்தில் அந்த பாபு என் வாழ்க்கையில் ஒரு பகுதியாயிட்டான். அவன் வேறு யாருமில்லே இப்ராஹிம் ராவுத்தர்தான். அந்தப் பேர்ல அவன் பண்ணிய லொள்ளும் ஜொள்ளும் கொஞ்சமில்லே, எங்க லூட்டிகளைப் பிறகு பார்ப்போம்.

என்னோட நடவடிக்கைகளைப் பார்க்கும்போது, வீட்டுக்கு அடங்காத பிள்ளையாக, தண்ணி தெளிச்சுவிட்ட கேஸாகத் தெரியலாம். ஆனால் உண்மை அதுவல்ல. எங்கப்பாவை எதிர்த்து ஒரு நாளும் பேசியதில்லை. காரணம் அவர் அடிப்பார்ங்கறதுக்காக இல்லே. அவர் காட்டற அன்பும் அரவணைப்பும் எங்களை மீறிப் போகவிடலே.

அதே மாதிரி எங்க சின்னம்மா, அக்கா, அண்ணன், அக்காவோட கணவர் பாவா இவங்க சொல்லுக்குக் காது கொடுப்பேன். எனக்கு ஐந்து தங்கச்சிங்க, அவங்க கோயில், திருவிழான்னு போனா அவங்களோட பாதுகாப்பு அதிகாரி நான்தான். வீட்ல ஏதாவது விசேஷம்னா வீட்டு வேலைகளில் ஒத்துழைப்பேன். பல்ப் சரியாக எரியலைன்னா மாத்திப் போடுறது, குடிக்கிற தண்ணி இல்லே, மோட்டார் ரிப்பேராகிப் போச்சுன்னா, கிணத்துல இருந்து எடுத்துக் கொடுப்பேன்.

கார்த்திகை மாசம் ஏழைகளுக்குச் சோறாக்கிப் போடுவார் எங்கப்பா. "அப்படி சாப்பிட வர்றவங்களுக்கு இலையை நீங்க தான் போடணும். அதே மாதிரி அவங்க சாப்பிட்ட இலையையும் நீங்கதான் எடுக்கணும் அப்படிச் செய்றதுதான் தர்மம்" என்பார்

இலையைப் போட்டு பரிமாறும் வேலைகளை மட்டும் தங்கச்சிகளைப் பார்க்கச் சொல்லுவேன். வந்தவங்க சாப்பிட்ட இலையை எடுத்துக் கொண்டு வெளியே போடுறது என் டியூட்டி!

நானும் விஜயகாந்த்தும் 27 வருஷங்களாக நெருங்கிய நண்பர்கள். ஒரே சமயத்தில் சினிமா சான்ஸ் தேடி அலைந்தவர்கள். நாங்க இரண்டு பேரும் தி.நகர் மகாலிங்கம் விலாஸ்ல தான் சாப்பிடுவோம். அங்கே தான் சந்திச்சுக்கு வோம். இரண்டு பேரும் உழைச்சுத்தான் இந்தளவுக்கு முன்னேறி இருக்கோம். அவரு என்னைவிடத் தன்னம்பிக்கை உள்ளவர், கடினமான உழைப்பாளி.

நான் கூட ஏதோ சான்ஸ் கிடைச்சா போதும்னு கிடைச்ச வேஷத்துல நடிச்சுக்கிட்டிருந்தேன். ஆனா அவரு அப்படியில்லே, நடிச்சா ஹீரோவாகத் தான்னு பிடிவாதமாயிருந்து சாதிச்சும் காட்டிட்டார். இடையில சின்னத் தொய்வு ஏற்பட்டப்போ கூட, வில்லன் வாய்ப்பு வந்தபோதும் ஏத்துக்காம பிடிவாதமாயிருந்து 'சாட்சி' படம் மூலமா பெரிய நிலையை அடைஞ் சார்.

நான் ஆரம்ப காலத்தில் சின்னச் சின்ன வில்லன் வேடங்களில் நடித்து, அதன் பிறகு வாய்ப்பு இல்லாமல் இருந் தேன். இனிமே நடிகனாக நீடிக்க முடியாத நிலை வந்ததும் டைரக்டராகணும்னு ஒரு கதையைத் தயார் செய்து, நண்பர் மணிவண்ணன், ஆர். சுந்தரராஜன்கிட்டே சொல்லி கருத்துக் கேட்டேன். "கதை நல்லா யிருக்குது. இதுக்கு விஜயகாந்த் தான் கரெக்டா இருப்பார்"னு சொன்னாங்க.

அதே மாதிரி வீட்ல கொலு வைப்பாங்க. அப்ப பலகைகளை செட் பண்ணி ஆணி அடிக்கிறது. எந்தெந்த பொம்மை எங்கே வைக்கலாம்னு ஐடியா கொடுக்கிறது எல்லாம் அடியேன்தான்.

எங்க கோஷ்டியில் எண்ணிக்கை பெருகியதும், ஸ்கூலை கட் அடிக்கிறது, சினிமாவுக்குப் போறது, ஊர் சுத்தறதுனு லூட்டிகளும் பெருகிடுச்சு. அந்த ஸ்கூலுக்குப் பக்கத்துலயே மீனாட்சி தியேட்டர் இருந்தது ரொம்ப சௌகர்யமாகிவிட்டது.

ஊர் சுத்துறதுக்காக, சினிமாவுக்குப் போறதுக்காக அடிக்கடி பொருத்தமான பொய்களைத் தேடிக் கண்டுபிடித்துச் சொல்வது ரொம்ப கஷ்டமான வேலை. தலைவலி, வயிற்றுவலி, தாத்தாவுக்கு நெஞ்சுவலி, பாட்டி கீழே விழுந்து அடி இப்படி அக்மார்க் பொய் சொல்றது இலேசுபட்ட விஷயமல்ல.

அந்த ஸ்கூல்ல கருப்பையாங்கற ஹெட்மாஸ்டர் இருந்தார். மனுஷர் எப்பப் பார்த்தாலும் மூணு அடி நீளத்துக்கு ஒரு பச்சை மரக்குச்சி வச்சுக்கிட்டு சுத்துவார், சரியா படிக்கலைன்னா, வாலாட்டுனா கையை நீட்டச் சொல்லி அடி அடினு அடிச்சு இரண்டு நாள் கையைத் தூக்காத மாதிரி செய்து விடுவார்.

அவர்கிட்டே ஒருபழக்கம். அடிக்கும்போது முரட்டுத்தனமா நின்று கொண்டிருந்தால் அடிச்சுட்டே இருப்பார். இரண்டாவது அடி விழும் போதே அழுதுட்டாங்கன்னா விட்டு விடுவார். நாங்க முதல் அடி விழுந்தவுடனே அழ ஆரம்பிச்சுடுவோம். எங்க நடிப்பைப் பார்த்து, "போய்த் தொலைங்க; இனிமே இப்படிச் செய்திங்க தோலை உரிச்சுடுவேன்" என்பார்.

தேவகோட்டை ஸ்கூலில் படித்ததில் பாதி அளவுக்குக்கூட இங்கே படிக்கல. ஸ்போர்ட்ஸ்ல கலந்துக்கல, சினிமா, அரட்டைக் கச்சேரி அதை மட்டும் அதிகம் செய்தேன். அதனால ஒன்பதாம் வகுப்புலயே என்னை ரெண்டு வருஷம் உட்கார வச்சுட்டாங்க, இந்த விஷயம் அப்பா காதுக்குப் போக டென்ஷனானார், என்னை அதட்டிக் கூப்பிட்டார். அவர் கண்களில் கோபம் இருந்தது.

**(சொல்றேன்)**

படங்கள் : **சஜோ**

## விஜயகாந்த் பற்றி வி.ஐ.பி.!

அப்ப அவரும் நானும் 'நூறாவது நாள்' படத்துல நடிச்சுட்டிருந்தோம். அவர்கிட்டே கதையைச் சொல்லி நான் டைரக்டராகுறேன்னு சொன்னேன். உடனே நான் டைரக்டரா குறதுக்கான ஏற்பாடுகளைச் செஞ்சாரு. அதுக் குள்ளே 'நூறாவது நாள்' படம் வந்து நான் பிஸியான வில்லனாகி விட்டேன். அதனால அவரை வச்சு நான் டைரக்ட் பண்ற வாய்ப்பு அமையாமலே போச்சு.

நான் எப்பவும் பேட்டிகள்ல சொல்வேன், 'அள்ளிக் கொடுத்தவர் புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர்., அதை எல்லாருக்கும் சொல்லிக் கொடுப்பவர் புரட்சி கலைஞர் விஜயகாந்த்'னு.

**- சத்யராஜ்**






கச்சேரி தினங்களில் வற்றல் குழம்போ மிளகு ரஸமோதான் செய்ய முடியும். சாதமும் காலையில் வடித்ததுதான். பருப்பு போட்டுச் சமைத்தால் இரவு பதினொரு மணிக்குத் திரும்பும்போது ஊசிப் போய்விடுகிறது.

மயிலாப்பூர், மந்தைவெளி, மாம்பலம் பகுதிகளிலிருந்து பஸ் - ரயில் பிடித்து நங்கநல்லூர் அடைந்து, பரமேஸ்வரன் காலனியின் கடைகோடிக்கு நடந்து வருவதற்குள் அத்தனை நேரம் ஆகிவிடும்.

"ரொம்ப சந்தோஷம்" என்று சொன்னபடி, வித்வான் அல்லது சபா செயலர் தருவதை வாங்கிக்கொள்ளும்போது சோமுவுக்கு மட்டும் சந்தோஷப்படுவது ரொம்ப சிரமமாக இருக்கிறது!

பின்னே... "ஐம்பது ரூபாயில் அசுவமேத யாகம் பண்ணிடலாம்" என்று மகிழ்ச்சிகொள்ள இதென்ன 1950ஆம் வருடமா! புத்தாயிரம் பிறந்து ஐந்தாண்டுகள் ஓடிவிட்டன... ஆனால், தம்பூரா போடுகிறவரின் சன்மானம் மட்டும் ஐம்பது நூறைத் தாண்டாமலே இருக்கிறது.

"ரொம்ப நாழி ஆயிடுத்தோ...? ஒரு ஆட்டோ பிடிச்சுப் போயிடுங்களேன்..." என்று சொன்னபடி வித்வான் சான்ட்ரோவிலோ இன்டிகாவிலோ ஏறிப் போய்விடுவார். ஓரிருமுறை ஸ்டேஷன் வரை ஆட்டோவில் போக முயன்ற சோமு, 'பேசாமல் ஆட்டோ டிரைவராக வேலை பார்த்திருக்கலாம்' என்று நொந்து கொள்ளும் அளவுக்கு வந்துவிட்டார்.

# தம்பூரா சோமு

இந்த நினைப்பை வெளிப்படுத்தியபோது கல்பனா கடிந்து கொண்டாள். "ஏன்பா உங்களுக்கு இப்படி விபரீதமா புத்தி போகுது...! நாதத்துலேயிருந்து நாராசத்துக்குப்



போகணும்னு ஆசைப்படறீங்களே..."

ஏதற்குமே ஆசைப்படும் நிலையில் ஆண்டவன் தன்னை வைக்கவில்லை என்று தோன்றியது சோமுவுக்கு.

சங்கீத வித்வானாக வேண்டும் என்று ஆசைப்பட்டுத்தான் தஞ்சாவூர் கல்யாணசுந்தரத்திடம் போனார்.

"முதல்ல தம்பூரா போட்டுப் பழகிக்கோ" என்று அமர்த்திவிட்டார் கல்யாணசுந்தரம்.

மூன்று மணி நேரம் கையெடுக்காமல் போட்டுக் கொண்டேயிருக்க வேண்டும். போடுவார் சோமு... ஆரம்பத்தில் ஆள்காட்டி விரலில் தோல் உரிந்து எரியும். ஆனால் தனிமையில் அமர்ந்து தந்திகள் வெளிப்படுத்தும் நாதத்தைத் துய்க்க துய்க்க சோமுவுக்கு வலி மறந்து போயிற்று. நாளாவட்டத்தில், தந்திகளின் ஸ்பரிசத்தை விரல் நுனி விலக்காமல் ஏற்க, அதில் இலேசாக ஒரு பெருமிதப் பள்ளம் விழுந்தது; வலி - எரிச்சலெல்லாம் பழைய கனவாயிற்று.

சோமு குருவின் கச்சேரிகளில் தம்பூரா போட்டார். பின்னால் அமர்ந்தபடி மேடையில் அவர் மனத்துக்கு இதமாக சின்ன உபகாரங்கள் செய்தார். தக்க நேரத்தில் வெந்நீரோ, முகம் துடைக்க துண்டோ தருவது, ஒலிபெருக்கியைக் கூட்டவோ குறைக்கவோ சொல்லிவிடுவது... குருவின் மனைவிக்கும் சிற்றேவல் - குற்றேவல் பண்ணினார் சோமு - அவ்வளவும் மன மகிழ்ச்சியோடுதான். தம்பூராவில் ஜங்காரமாக சுருதி சேர்ப்பதும் கை வந்தது. ஆனால் சங்கீத வித்யையை மட்டும் கல்யாணசுந்தரம் மனமார வழங்கவுமில்லை; சோமுவுக்குத் தாமாக அதை கிரஹித்துக் கொள்ளத் தெரியவுமில்லை.

"இப்படியே எத்தனை நாளைக்கு இருக்கறதாம்...?" கல்யாணமாகி இரண்டு வருடங்

சீதா ரவி

கள் கழித்துதான் கேட்க தைரியம் வந்தது சுந்தரிக்கு.

"எப்படி...?" சோமு கொஞ்சம் அதட்டலாக அவளை நோக்கவும் மிரட்சியை மறைத்துக்கொண்டு நியாயம் பேசினாள் சுந்தரி.

"இன்னும் ஆறு மாசத்துல வீட்டுல ஒரு குழந்தை இருக்கும். அஞ்சும் பத்தும் வந்துகிட்டிருக்கு. நமக்கு அரை வயித்துக்குப் போதும்... வெறும் தம்பூரா போட்டு ஒரு குழந்தையை வளர்க்க முடியுமா?"

"அதென்னடி வெறும் தம்பூரா...? பின்னே வெல்லம்போட்டத் தம்பூராவா போட முடியும்!" வார்த்தைகளால் அவளைச் சாடி அடக்கியபோதே சோமுவுக்குத் தன் இயலாமை உறைக்காமலில்லை.

தனக்குப் பிழைக்க வேறு வழி தெரியாது என்பதை மட்டும்தான் அவரால் மனைவிக்குப் புரிய வைக்க முடிந்தது.

அதற்கே அவள் கண்கலங்கிவிட்டாள். "அச்சோ!... உங்களைக் குறை சொல்லலை... கொஞ்சம் போட்டுக் கொடுக்கச் சொல்லி அண்ணன்கிட்டே கேட்கலாமில்லே...?" என்றாள் தழுதழுக்க. அவள் கண்ணைத் துடைத்தபடி பேசியது சோமுவுக்கு நேற்றிரவு நடந்ததுபோல் நினைவிருக்கிறது.

"கையில வாங்கற அஞ்சு - பத்துக்காக நான் இந்தத் தொழிலைப் பண்ணலை... காதுல வாங்கறது இருக்கு பாரு... அதுக்கு கணக்கு போட்டு மதிப்புச் சொல்ல முடியாது..."

"தெரியுமே... அண்ணனோட சங்கீதம் சாமானியமில்லேன்னு என்னை மாதிரி கர்ப்பூர வாசனை அறியாதவங்களுக்குக் கூட தெரியுமே!"

"அப்படி குறைச்சு சொல்லிக்க வேண்டாம். நீ பூஜையில திருவாசகம் பாடறதுகூட எனக்குத் தேன்போல தான் இருக்கு சுந்தரி... அண்ணன் சங்கீதம் ரொம்ப உசத்திதான் நான் தினமும் விழுந்து கும்பிடறேன் அவரை.... ஆனா அந்த சங்கீதத்துக்கு ஆதாரம் தம்பூரா சுருதி... அந்த நாலு தந்தியும் ராம - லக்ஷ்மண - பரத - சத்ருக்னாளாட்டம் சேர்ந்து இழைஞ்சுட்டா அதுவே உலகத்துக்கான சங்கீதம் மாதிரி ஒலிக்கும்... அப்போ தம்பூராவைத் தூக்கி மடியிலே வைச்சுண்டு மீட்டினா ஐயாறப்பன் சன்னிதியிலே கர்பகிருஹத் தடியில உட்கார்ந்திருக்கிற மாதிரியில்லே இருக்கும்."

சுந்தரிக்குக் கண் கலங்கியது. இன்னும், கைப்பழகிய தம்பூராவின் பட்டான மழமழப்பையும் தந்திகளை இழுத்துப் பிடிக்கும் கிழ்ப்பாலக்கட்

**ரோ**சாப்பூ மொகத்துக்காரி
எளநொங்கு உதட்டுக்காரி
ரோசமுள்ள நெஞ்சுக்காரி
நூத்திலொண்ணு குணத்துக்காரி

ஆத்தோர ஊருக்காரி
ஆத்து மீன தூதுவிட்டேன்
பாத்திச்சோ பாக்கலியோ
பத்தினி உன் பாதங்களை

தென்னந்தோப்பு ஊருச்காரி
சென்னல்காத்த தூதுவிட்டேன்
தழுவியதோ தழுவலயோ
தேன்மணக்கும் உன்னுடம்பை

வேப்பம் பூ வாசத்தை நான்
விரும்பியே தூதுவிட்டேன்
பாத்து மயங்கிடிச்சோ
பாக்காமெ திரும்பிடிச்சோ

ஓடிவந்த மான்குட்டியெ
உனக்காகத் தூதுவிட்டேன்
தேடிச்சோ தேடல்லயோ
செல்லக்குட்டி உன்முகத்தை

என்னைப் பாக்க நீ வராட்டா
மண்ணாகப் போயிருவேன்
கண்ணாட்டி வந்திடடி
கண்ணாலம் பண்ணிக்கலாம்

உருகுதேண்டி உன்னால
ஒல்லிவத்தி மெழுகாட்டம்
கருகவிட்டுப் போயிடாதே
கல்மனசு சின்னப்புள்ளே!

டையின் செயல்நேர்த்தியையும், ஒலியின் அடைப்புகளை நீக்கி ரீங்காரத்தை ரகசியமாய்க் கூட்டும் நூல் இழைகளின் தந்திரத்தையும், நழுவியும் விலகியும் போக்கு காட்டவல்ல பிருடைகளின் பொல்லாத்தனத்தையும் மனைவியிடம் விவரித்தார் சோமு. ஓரங்களில் இழைத்த சித்திர வேலைப்பாடுகளில் வெடித்து மலர காத்திருக்கும் தாமரை மொட்டு




வடிவங்களுக்குள்ளெல்லாம் சங்கீதம் ததும்பிக் கொண்டிருப்பதைச் சொன்னார்.

அவ்வளவும் புரியாவிட்டாலும் சுந்தரிக்கு அவருடைய காதல் புரிந்தது; தாகம் புரிந்தது.

"நம்ம வீட்டுலயே ஒரு தம்பூரா இருந்தா நல்லாயிருக்குமில்லே...?" கணவனின் ஆயுட்கால கனவை மீட்டிப் பார்க்கிறோம் என்பதறியாது அவள் வெள்ளையாகச் சொன்னபோது சோமுவால் அவளை இழுத்துப் பிடித்து முத்தமிடத்தான் முடிந்தது.

கனவு கனவாகவே இருக்கிறது. சுந்தரி இல்லை... இருபது வருடங்களாக இல்லை. கல்பனாவுக்குத் தாயும் தகப்பனுமாகி சோமுவே வளர்க்க வேண்டியதாகிவிட்டது. துயரங்களையும் இழப்பின் பாரத்தையும் தம்பூரா சுருதியில் இழைத்து இழைத்து கரைத்தார். ஒரு மீட்டு போதும் மனத்தைச் சமநிலைப் படுத்த... அடுத்து வரும் மீட்டுகளில் உலகமே மறந்துபோகும். கச்சேரியில் யார், என்ன பாடுகிறார்கள் என்பதைக் கடந்த ஒன்றுதலுடன் தம்பூரா சுருதியும் அவருமாக... நாதபிரதேசத்தில் சஞ்சாரம் செய்வார்.

கல்யாண சுந்தரத்தின் காலத்துக்குப் பின் அத்தனை வித்வான்களும் 'சோமு வேண்டும் தம்பூராவுக்கு' என்று கேட்க ஆரம்பித்தனர். சோமு, தம்பூரா சோமுவானார். குருவி சேர்ப்பதுபோல் சேர்த்து கல்பனாவைப் படிக்க வைத்துக் கல்யாணமும் செய்து கொடுத்தார். ஆனால் தம்பூரா சோமுவால் ஒரு தம்பூரா வாங்க முடியவில்லை... நூறு ரூபாய்க்கு நல்ல ராம்ஜி தம்பூரா கிடைத்த காலத்திலும் முடியவில்லை; இப்போது மூவாயிரத்து ஐந்நூறு கொடுத்து முரளி மியூஸிகல்ஸில் வாங்கவும் சக்தி இல்லை.

வெள்ளை வேட்டிச் சட்டையைச் சலவை செய்யவே பதினெட்டரை ரூபாய் ஆகிறது. அது நெரிசலில் கசங்காமலிருக்க நான்கு மணி ரயிலிலேயே நங்கநல்லூரை விட்டுக் கிளம்ப வேண்டியிருக்கிறது. இரவு வீடு திரும்பும்போது நூறு ரூபாய்







"ஸ்டேஜ்ல நயன்தாரா, நமீதா கட் அவுட் இருக்குதே... எதுக்கு?"

"ஸ்டேஜ் அட்ராக்ஷனா இல்லைன்னு ரசிகர்கள் புகார் செஞ்சாங்களாம்!"

- அம்பைதேவா

கையில் இருந்தால் பெரிது. அதிலும் வர வர எலக்ட்ரானிக் பிறாண்டல் ஒலிகளைத் தம்பூரா என்று சொல்லிக் கொண்டு எல்லோரும் கச்சேரி பண்ண ஆரம்பித்துவிட்டனர். டிசம்பர் சீசனை விட்டால் நிஜ தம்பூரா வாய்ப்புகள் குறைவு. வீட்டு வாடகையைக் கூட திருச்சியிலிருந்து கல்பனாவும் மருமகனும் மணியார்டர் பண்ணுகிறார்கள். ஆனால் தம்பூரா ஆசை மட்டும் அடங்க மறுக்கிறது.

இருட்டில் மெள்ள வீட்டை நோக்கி நடக்கையில் சுந்தரியின் குரல் அவர் காதில் ஒலிக்கிறது. "நம்ம வீட்லயே ஒரு தம்பூரா இருந்தா நல்லாயிருக்குமில்லே..."

டீக்கடை வளைவைத் தாண்டுகையில் வீட்டு ஜன்னலில் விளக்கொளி தெரிகிறது. மாற்றுச் சாவி ஒன்று பக்கத்து வீட்டில் உண்டு. அதைக் கொண்டு யாரோ திறந்திருக்க வேண்டும். யாரோ என்ன... கல்பனாவைத் தவிர யாராக இருக்க முடியும்! வேகமாய் நாலு எட்டு எடுத்து வைத்தார். கல்பனாவேதான். அவ்வப்போது மொட்டு மாதிரி சொல்லாமல் கொள்ளாமல் வந்து நிற்பாள்.

"வாம்மா..." படியேறிய படியே கேட்டார் "மாப்பிள்ளை நல்லாயிருக்காரா...? அட! நீங்களும் வந்திருக்கீங்களா மாப்பிள்ளை?"

செருப்பைக் கழற்றிவிட்டுத் திரும்பியபோது பூஜை அலமாரி முன் அது பாயில் கிடத்தப்பட்டிருப்பதைப் பார்த்தார்.

நல்ல கருங்காலி நிறத்தில் ஒரு தம்பூரா. நீண்டு மின்னிய தந்திகள். பருத்த குடத்தில் ஓடும் பரங்கி வரிகள். கண்ணில் ஒற்றிக்கொள்ளும் அழகுடன் தொன்மையின் களை சொட்டச் சொட்ட பாயின் நீளத்தை ஆக்கிரமித்தது.

"யாருது இது...?"

"உங்களதுதான் மாமா... திருச்சியில ஒரு பங்களாவை இடிச்சுக் கட்டறப்போ சாமானோட சாமானா விலைக்குத் தந்தாங்க. கல்பனா ரொம்ப காலமா சொல்லிட்டிருந்தா, அப்பாவுக்கு ஒரு தம்பூரா வாங்கித் தரணும்னு... வாங்கி, ரயில்ல வைச்சு எடுத்துட்டு வந்துட்டோம். தந்தியெல்லாம் மாத்தி தயாராயிருக்கு..."

அருகே போய் குனிந்தார் சோமு. தம்பூராவை இலேசாகத் தொட்டுப் பார்த்தார். "ரொம்ப விலை ஆகியிருக்குமே?"

"ஆயுசுக்கு ஒரு தடவைதானே மாமா. விலையைப் பத்தி ஒண்ணுமில்லே.. விடுங்க."

"எடுத்து மீட்டுங்கப்பா" என்றாள் கல்பனா.

தூக்கி நிறுத்தியபோது சோமுவுக்கு உடல் சிலிர்த்தது. சுந்தரி இல்லையே என்ற ஏக்கம் புயலெனத் திரும்பி தடுமாறச் செய்தது. நடுங்கும் விரல்களுடன் மீட்ட... என்ன ஆச்சர்யம்! சரியாக, சுந்தரியுடைய சுருதிக்கு ஒலித்தது அந்த தம்பூரா! ○

# ரிங்டோன் கச்சேரி!

கலைவிழா சிறப்பிதழ்

"ரசிகர்கள் எல்லாரும் கேன்டீனுக்குப் போனது தெரிஞ்சும் பாடகர் சந்தோஷமா இருக்காரே... எப்படி?"

"கேன்டீனை குத்தகைக்கு எடுத்துருக்கறதே அவர்தானே?"

"சபாவுல ஆடியன்சுக்கும் மைக் வச்சுருக்காங்களே... எதுக்கு?"

"தன்னைப் பற்றி ரசிகர்கள் என்ன பேசறாங்கனு வித்வான் ஒட்டு கேட்கற ரகம்!"





"கச்சேரி கேட்க இளைஞர்கள் கூட்டம் அலை மோதுதே... எப்படி ?"

"செல்போனுக்கு நிறைய ரிங்டோன் வாசிக்கறதா பாடகர் சொல்லியிருக்காராம்!"

- அம்பை தேவா

11.12.2005 முதல் 17.12.2005 வரை

# நடக்குமென்பார்













**மேஷம்:** திருமண காரியம் கைகூடும். குழந்தை இல்லாதவர்களுக்கு மகப்பேறு ஏற்படும். சிலருக்கு வீடு/வாசல் மாற்றியமைக்க நேரிடும். வாகனம் வாங்க நல்ல காலம். நோய், நொடி தீரும். மனக்குழப்பம் இராது. உத்தியோகஸ்தர்களுக்கு நற்பெயர் கிட்டும். பங்கு மார்க்கெட் தொழில் செய்பவர்களுக்கு நல்ல பலன் கிடைக்கும்.

**ரிஷபம்:** சத்ரு தொல்லை விலகும். தனம், குடும்பம், வாக்கு மேலோங்கும். குடும்பத்தில் சுபச் செலவுகள் ஏற்படும். நெருங்கிய கூட்டாளிகள்/உறவினர்கள் விலகிச் செல்வார்கள். தொழில் செய்பவர்கள் நிதானத்துடன் நடந்து கொள்ளவும். கூட்டு வியாபாரம் செய்பவர்கள் எச்சரிக்கையுடன் நடக்கவும். ஆரோக்கியத்தில் கவனம் தேவை. ராகவேந்திர ஸ்வாமி அல்லது யோக நரசிம்மரை வழிபடுதல் நலம் பயக்கும்.

**மிதுனம்:** நினைத்தது கைகூடும். திருமணம் ஆகாதவர்களுக்கு திருமணம் கைகூடும். குழந்தை பாக்கியம் கிட்டும். சிலருக்கு வெளியூர் பிரயாணம் ஏற்படும். வியாபாரிகளுக்குப் புதிய தொழில் செய்ய ஏற்ற காலம். வீடு வாங்க நல்ல காலம். உத்தியோகத்தில் ஊதிய உயர்வு கிடைக்கும். ஆரோக்கியம் நன்றாக இருக்கும். சத்ரு தொல்லை நீங்கும். ராகு/கேதுவை வழிபட்டு வரவும்.

**கடகம்:** எப்பேர்பட்ட போட்டியிலும் வெற்றி அளிக்கும் வாரம். குழந்தைகள் வழியில் சுப நிகழ்ச்சிகள் கைகூடும். சிலருக்கு வீடு வாங்கும் யோகம் கிட்டும். வியாபாரிகள் தொழில் ஏற்றம் பெறுவார்கள். மகான் தரிசனம் கிட்டும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. வியாழன், சனிக்கிழமைகளில் குரு/சனி வழிபாடு செய்யவும்.

**சிம்மம்:** இதுநாள் வரை இருந்து வந்த பிரச்னைகள் படிப்படியாகக் குறையும். மனதில் தைரியமும் துணிவும் கூடும். குடும்பத்தில் சுபச் செலவு ஏற்படும். தடை விலகித் திருமணம் கைகூடும். குழந்தை பாக்கியம் கிட்டும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. சனி/குரு/ராகு/கேது வழிபட்டு வரவும்.

**கன்னி:** எண்ணங்கள் யாவும்



• படம்: ஸ்ரீஹரி

நடக்கும்!



ஏடேறும். குடும்பத்தில் அமைதி நிலவும். சுப காரியம் நடக்கும். குடும்பத்தில் சந்தோஷம் ஏற்படும். கணவன்/மனைவி உறவு நன்றாக இருக்கும். கொடுக்கல்/வாங்கல் நல்லபடியாக இருக்கும். வியாபாரிகள் புதிய தொழில் துவங்கலாம். உத்தியோகத்தில் நற்பெயர் கிட்டும். வாக்கு வன்மை மேலோங்கும். ராகு/கேது வழிபடுதல் நலம்.

**துலாம்:** சாதனை படைக்கும் வாரம். தனம், வாக்கு, குடும்பம் மேலோங்கும். குடும்ப வாழ்வு மகிழ்ச்சிகரமாக இருக்கும். புதிய முயற்சிகள் கைகூடும். . குழந்தைகள் வழியில் நல்ல முன்னேற்றம் தெரிய ஆரம்பிக்கும். வியாபாரிகளுக்கு தொழிலில் இருந்த மந்தநிலை மாறி, தொழில் சூடு பிடிக்கும். ஆஞ்சநேயர் ஸ்லோகம் சொல்லி வரவும். சனிபீடை விலகும்.

**விருச்சிகம்:** திருமணம் ஆகாதவர்

தஞ்சை பரத்வாஜ்











பரத்வாஜ் பதில்கள்

**என் மகள் அனிதாவுக்குத் திருமணம் எப்போது?**

**- பெயர் வெளியிட விரும்பாத சென்னை வாசகி**

தங்கள் மகளுக்கு சென்னையில் பிறந்த பையன் அமைவான். செவ்வாய் தோஷம் உள்ள பையனைப் பார்க்கவும். 2006-ல் திருமணம் நடக்கும்.

**எனது மகனுக்குத் திருமணம் எப்போது? என் மகன் விரும்பியபடி மனைவி அமைவாளா?**

**- லட்சுமி, தஞ்சாவூர்**

உங்கள் பையனுக்கு 30வது வயது ஆரம்பத்தில் திருமணம் நடக்கும். ஒரே பெண்ணுள்ள வீட்டில் அசலில் பெண் அமைவாள். சங்கீதத்தில் ஈடுபாடு கொண்ட, படித்த பெண் அமைவாள். பரிகாரம் தேவையில்லை.

**எனது மகளுக்கு எப்போது திருமணம் நடக்கும்?**

**- சீதாலட்சுமி, திருவான்மியூர்**

உங்கள் மகளுக்கு சனி தசையில் சனி புத்தி நடக்கிறது. பிரயாசைப் படாமலே திருமணம் கைகூடும். உறவில் பையன் அமைய மாட்டான். பரிகாரம் வேண்டும். தனியார் துறையில் சம்பாதிக்கும் பையன் அமைவான். நல்ல கல்வி இருக்கும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும்.

**என் மகனுக்குத் திருமணம் எப்பொழுது நடக்கும்?**

**- இரா. நடராஜன், ராஜபாளையம்**

தங்கள் பையனுக்கு 39 வயதில் திருமணம் நடக்கும். தற்போது சனி தசை முடிந்து சனி புத்தி நடக்கிறது. சர்ப்ப தோஷம் உள்ள பெண்ணாகப் பார்க்கவும். சித்திரை நட்சத்திரத்துக்கு, சித்திரை நட்சத்திரம் செய்யக்கூடாது. வரக்கூடிய மனைவி படித்தவளாகவும் வேலையில் உள்ள பெண்ணாகவும் அமைவாள். உறவு இல்லாத இடத்தில், உடன்பிறந்த ஒருவர் உள்ள வீட்டில் பெண் அமைவாள்.

# நாள் முழுக்க



"நான் 50% பாடகி.
50% குடும்பத் தலைவி"



"நான் பாடினால், என் பொண்ணு விஷ்ருதி ஸ்வரம் பாடுவாள்... கீர்த்தனைகளை 'ஹம்' செய்தால், அவள் வரிகளைக் கண்டுபிடித்து விடுவாள்...."

- சந்திரமௌலி
படங்கள்: ஸ்ரீஹரி

களுக்கு திருமணம் கைகூடும். கொடுக்கல்/வாங்கல் நற்பலனைத் தரும். கணவன்/மனைவி உறவு நன்றாக இருக்கும். வீடு வாங்க நல்ல காலம். நெருங்கிய நண்பர்/உறவினர் பிரிந்து செல்வார்கள். கூட்டுத் தொழில் செய்பவர்களுக்கு கவனம் தேவை. மகப்பேறு பாக்கியம் கிட்டும். உத்தியோகத்தில் முன்னேற்றம் கிட்டும். குரு/ராகு/கேது வழிபாடு நலம் தரும்.

**தனுசு:** எண்ணிய காரியம் கைகூடும். குடும்பத்தில் சுபகாரியங்கள் நடக்கும். தடைகள் விலகி முயற்சிகள் வெற்றி அளிக்கும். குழந்தை பாக்கியம் கிட்டும். கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். புதிய தொழில் தொடங்கலாம். உத்தியோக, வேலை மாறுதல் ஏற்படும். நண்பர்/உறவினர்களால் ஆதாயம் உண்டு. சனி/ராகு/கேது வழிபடுதல் நலம்.

**மகரம்:** தொட்டது துலங்கும். நினைத்தது நடக்கும். மதிப்பு/மரியாதை மிகுதியாகும். பணப்பற்றாக்குறை வராது. புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். செலவுகள் கட்டுப்பட்டு இருக்கும். திருமணம் ஆகாதவர்களுக்கு திருமணம் கைகூடும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். சத்ரு தொல்லை விலகும்.

# பாட்டு!

**- காயத்ரி கிரீஷ்**




"சாதம் ஊட்டும்போதும் ஏதாவது பாடணும். 'காக்கைச் சிறகினிலே' பாட்டு விஷ்வேஷுக்கு ரொம்பப் பிடிக்கும்.





"குழந்தைங்க ஸ்கூலுக்குப் போகிறபோது ஜாலி மூடில் இல்லன்னா, நாலு வரி 'சின்னஞ்சிறு கிளியே' பாடுவேன்... சந்தோஷமா புறப்பட்டுடுவாங்க."

தூரதேசம் செல்லும் வாய்ப்பு வந்து சேரும். வியாபாரிகள் நல்ல முன்னேற்றம் அடைவார்கள். குரு/சனிவழிபாடு சிறந்தது.

**கும்பம்:** பெயரும் புகழும் ஏற்படும். பணப் புழக்கம் தாராளமாக இருக்கும். தனம், வாக்கு, குடும்பம் மேலோங்கும். உத்தியோகத்தில் நற்பெயர் கிடைக்கும். அந்நிய நாட்டு மனிதர்களால் அனுகூலம் ஏற்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். எதிர்ப்பு, தொல்லை விலகும். உணவுக்கட்டுப்பாடு அவசியம். நெருங்கிய கூட்டாளிகளைப் பிரிய நேரும். ராகு/கேது வழிபட்டு வருதல் நலம்.

**மீனம்:** நன்மையும் தீமையும் கலந்த வாரம். பணக்கஷ்டம் இருக்காது. உத்தியோகத்தில் மேன்மை கிட்டும். சிலருக்கு வீடு மாற்றம்/வேலை மாற்றம் கிட்டும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. உத்தியோகத்தில் நல்ல பெயர் கிடைக்கும். மாணவ/மாணவிகள் தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெறுவார்கள். கொடுக்கல்/வாங்கல் நன்றாக இருக்கும். ராகு/கேது/குரு வழிபாடு நற்பலன் தரும். ஆஞ்சநேயருக்கு சனிக்கிழமைதோறும் தீபம் போடவும்.







# கலைப்பூக்கள்

ஒருபக்கம் கோவாவில் சர்வதேச திரைப்பட விழா களைகட்டியிருக்க, சென்னையிலோ சர்வதேச ஆவணப் படவிழா... அலையன்ஸ் ஃப்ரான்சிஸ் மாக்ஸ்முல்லர் பவன், சிகா சென்டர் என எங்கும் டாகுமென்டரிகளின் அணி வகுப்பு. இவற்றில் தாமிரபரணி படு கொலைகளை டாகுமென்டரி ஆக்கிய காஞ்சனை சீனிவாசனின் புதிய ஆவ ணப்படங்கள் பரபரப்பு ஏற்படுத்தின. ஆனால், கழைக் கூத்தாடிகளின் அந்தரத் தில் தொங்கும் வாழ்க்கை அவலங்களை உள்ளது உள்ளபடி பதிவு செய்திருந்த 'கலைப்பூக்கள்' ஆவணப்படம் எல்லோ ரது சிறப்புக் கவனத்துக்கும் இலக்கானது. இந்த டாகுமென்டரியைத் தயாரித்திருப் பவர்கள், விஷுவல் கம்யூனி கேஷன் பயிலும் மாணவர் கள்.

இருபத்தைந்து நிமி டம் ஓடக்கூடிய இந்தப் படத்தில் கழைக் கூத்தாடிகள் என்ற பிரிவினரைப் பற்றிய சகல விவரங்களும் அலசப்பட்டிருக்கின்றன. ஆறடி உயரத்தில் அரை வயிற்றுக்காகப் போராடும் பிஞ்சுகளையும், 'நாங் கள்தான் இப்படி யாகி விட்டோம். எங் கள் சந்ததிகளாவது இந்தப் போராட்டத் தில் இருந்து விடு படட்டும்' என்று அந்தப் பிஞ்சுகளின் பெற்றோர் படும் வேத னைகளையும் மனத்தில் ஆணியடிப்பது போல் சொல்லியிருக்கிறார் கள். கழுத்தில் டை, கால்களில் ஷூ, தோளில் புத்தகப்பை சகிதமாக, இந்தச் சமுதாயத்தின் அடுத்த தலைமுறைகள் பள்ளிக்குச் செல்லும் காட்சிகள் பார்ப்பவர்கள் நெஞ்சில் நம் பிக்கை வெளிச்சத்தைப் பாய்ச்சுகின்றன.

ஆனால், "அரசு கொடுக்கிற எல்லா அடிப்படை வசதிகளையும் அனுபவிக்கத் தேவையான ஜாதிச் சான்றிதழ் இந்தப் பிரிவினருக்கு இன்னும் வழங்கப்பட வில்லை. அது வழங்கப்பட்டால், வயிற் றைக் கட்டி, வாயைக் கட்டி தங்கள் மழ லைகளைப் பள்ளிக்கு அனுப்பும் பெற் றோர்கள், அவர்களைப் படிக்க வைத் ததற்கான முழு பலனையும் அடைவார் கள்." இப்படி ஓர் அழுத்தமான வாதத்தை முன் வைக்கும் இந்த டாகுமென்டரியின் உருவாக்கத்தில் பங்கேற்றுள்ளனர் சாஃப்ட்வியு விஷுவல் கம்யூனிகேஷன் மாணவர்கள்.

- ஸ்ரீ

# அட! வலைபாயுதே



**டேட்டா பேஸ்:**

'ரோசாப்பூ ரவிக்கைக்காரி' படம் எப்போது வந்ததுன்னு தெரியணுமா, இதுவரைக்கும் 'ஐ லவ் யூ' அப்படிங்கிற தலைப்புல எத்தனை மொழிகளில், எத்தனை படங்கள் வந்திருக்குன்னு தெரியணுமா, ஜூலியா ராபர்ட்ஸோட அடுத்த படம் என்னன்னு தெரிஞ்சுக்கணுமா, மார்லின் மன்றோ நடிச்ச படங்களோட லிஸ்ட் உடனே வேணுமா - எல்லாம் ரொம்ப சுலபம். நொடிகளில் எல்லாவற்றுக்கும் விடை தரக் காத்திருக்கு இணைய உலகின் மிகப் பெரிய திரைக் களஞ்சியம் 'இன்டெர்நெட் மூவி டேட்டா பேஸ்' (imdb.com) பல்வேறு மொழிகளில் வெளிவந்த, வரப்போகும் திரைப்படங்களின் விவரங்களோடு கடை விரித்துள்ள உருப்படியான தளம். சினிமா சம்பந்தப்பட்ட ஆராய்ச்சியாளர்களுக்கு இந்தத் தளம் குரு. மிக எளிதாகத் தகவல்களைத் தேடிப் பெற முடிகிறது. தேடல் வார்த்தைகளில் பிழை இருந்தால் கூட அதற்கு இணையான வார்த்தைகளுக்கான விடைகளையும் தேடிப் பிடித்துத் தருவது வெகு சிறப்பு. 'கொட்டாம்பட்டியில் ஒரு கோயிஞ்சாமி' படம் எப்ப வந்ததுன்னு தெரியுமா? போய்த் தேடிப் பார்த்துக்கோங்க!

## சினிமா களஞ்சியம்!

**கிரிக்கெட்:**

கிரிக்கெட்டோட இப்ப மழைதான் விளையாண்டுகிட்டு இருக்கு. அதுக்காக எப்பவுமா மழை பெய்யப் போகுது. தூர்தர்ஷனை நம்பித்தான் பலர் இங்க கிரிக்கெட் பார்த்துக்கிட்டிருக்கோம். மத்த மேட்சுகளோட சில முக்கியமான ஷாட்ஸ், விக்கெட்ஸ் பார்க்கக் கிடைச்சா எவ்வளவு சந்தோஷமா இருக்கும். ஆமா கிடைக்குதுங்க. அதுக்கு நீங்க போக வேண்டிய தளம் onlinemedia.in. க்ளிப்பிங்லை டௌன்லோட் பண்ணிக்கலாம் கிரிக்கெட் வர்ணனையை ஆடியோவாகவும் கேட்கலாம். கிரிக்கெட் ரசிகர்கள் கன்னத்தில் போட்டுக்கொள்ள வேண்டிய தளம்.

**வலைப்பதிவு:**

ஒருநாள் நல்ல மழை. மரமெல்லாம் முறிந்து வீட்டுக்கு முன் விழுந்திருந்தது. மழையில நிறைய தண்ணி, (அப்பா கேட்கிறார்... வெள்ளமா அஞ்சலி?), வெள்ளம்தான் வந்திருந்தது. மரம் இருந்ததால வெள்ளம் வீட்டுக்குள்ளே வரவில்லை. அந்த நாய்க்கு நல்ல சந்தோஷம். வெளியில் போய் நல்லா விளையாடி, தண்ணியில நீந்தி நீந்தி விளையாடி, மரத்தையும் இழுத்துக்கொண்டு போய் விட்டார். அதனால் வீட்டுக்குள்ளே எல்லாம் தண்ணி வந்து விட்டது. அப்போ எல்லாம் மிருகங்களுக்கும் சரியான கோபம் வந்தது. இனி சொன்னது நாங்கள் இவரை வெளியில் கலைச்சு விடுவம். இவர் இங்க வரக்கூடாது என்றது. எல்லோரும் ஓமென்று சொல்லி நாயைக் கலைத்து விட்டார்கள்.

(anjalisplace.blogspot.com வலைப்பதிவிலிருந்து. வலைப்பதிவாளர் அஞ்சலி தன்னைப் பற்றிக் கூறியுள்ளது, 'எனக்கு டிசம்பரில் 7 வயது ஆகப்போகிறது. எங்கள் வீட்டில் நானும் அப்பாவும் அம்மாவும் இருக்கிறோம். நான் இரண்டாம் வகுப்பு படிக்கிறேன்.)




- வலைஞன்

“**கா**மாட்சி மோட்டார் கீழே போயாச்சு.” அப்பாவின் குரல் கேட்டதும் அம்மா “அடாடா, மணி எட்டாயிடிச்சா?” என்று சொல்லிக்கொண்டே என்னை வேகமாகக் குளிப்பாட்டினாள். பின்பக்கம் கிழிந்திருந்த நிக்கர் ஒன்றை மாட்டி விட்டு கீழே விழாமல் இருக்க கறுப்புக் கயிறு ஒன்றை அதன்மேல் கட்டி, முடிச்சுப் போட்டாள்.

சட்டையும் கிழிந்திருக்க நான் பள்ளிக்கூடம் போகமாட்டேன்னு அழுதேன். “நீ சமத்து பையனில்லே. மத்யானம் நீ வர்றதுக்குள்ளே இன்னொரு சட்டையும் டிராயரும் காய்ந்திருக்கும். இத நானே தச்சு தர்றேன்” என்று என்னைச் சமா தானப்படுத்தி பழைய சோற்றை ஊட்டிவிட்டாள். பள்ளிக்கூட மணி அடிக்கும் சத்தம் கேட்டதும் பையை எடுத்துக்கொண்டு ஓடினேன்.

கிழிந்த சட்டை, நிக்கர் இரண்டும் வெளியில் தெரியாமலிருக்க பையை வைத்து மறைத்துக்கொண்டே உள்ளே போனேன். வகுப்பில் முத்துவும் மணியும் சட்டையே இல்லாமல் வந்திருந்ததைப் பார்த்ததும் எனக்கு ஒரே சந்தோஷம். தலை நரைத்த தாமு வாத்தியார் இன்று வெள்ளைச் சட்டை, வெள்ளை ஷராயுடன் வந்தார். “வணக்கமய்யா” என்று சொன்ன எங்களைப் பார்த்து ‘சத்தமில்லாம படிச்சிட்டி ருங்க’ன்னு சொல்லிவிட்டு கண்ணை மூடித் தூங்க ஆரம்பித்தார்.

பெரியண்ணன் என்ற பையன் பேய்க் கதை ஒன்று சொல்ல ஆரம்பித் தான். ரொம்ப பயமாக இருந்தது. ரொம்ப நேரம் ரசித்துக் கேட்டுக் கொண்டேயிருந்ததில் நேரம் போனதே தெரியவில்லை. மேலே போகும் மோட்டார், ரோட்டில் நிற்கும் சத்தம் கேட்டதும் “சார், மணி பன்னிரெண்டு” என்று நாங்கள் போட்ட சத்தத்தில் தாமு வாத்யார் விழித்துக்கொண்டு “பெல்லடிங்கடா” என்று சொல்ல நெட்டையன் பெல் அடிக்க, பையன்கள் சிதறி னார்கள்.

மேலே போன மோட்டாரிலிருந்து என் அப்பா இறங்கி வந்து கொண்டிருந்தார். நான் ஓடிப்போய் அப்பாவைக் கட்டிக்கொண்டேன்.

“ஏண்டா... டிராயரைக் கிழிச்சே?” என்று கன்னத்தைத் திருகினார்.

“உங்க வேட்டி கூடதான் கிழிஞ்சுருக்கு!” என்றேன் பயப்படாமல்...

# ஓட்டைக் காலணா!

அப்பா ஒண்ணும் சொல்லாமல், என்னைத் தூக்கிக்கொண்டார்.

**கா**ர்த்திகை தீபத்துக்கு இன்னும் இருபதே நாட்கள் இருக்கும்

போது ஊர்க்கோடியிலுள்ள அம்மன் கோயில் திண்ணையில் பெரிய துணி மூட்டையுடன் இரண்டு பேர் உட்கார்ந்து ஒரு பெரிய நோட்டுப் புத்தகத்தில் ஒவ்வொரு வீட்டுப் பெயரையும் எழுதிக்கொண்டு துணிகளை விநியோகம் செய்து கொண்டிருந்தார்கள். அப்பாவும் அம்மாவும் என்னை அழைத்துக் கொண்டு போய் எனக்கு இரண்டு சட்டை, டிராயர், அக்காவுக்கு பாவாடை சட்டைக்குத் துணி, அம்மாவுக்குச் சேலை, அப்பா, அண்ணாவுக்கு சட்டை, வேட்டி எடுத்தார்கள்.

"சாமி, மொத்தம் முப்பது ரூபாயாச்சு. மாசம் அஞ்சு ரூபாய் வீதம் கொடுத்துடுங்க"னு சொல்லி துணிகளை அப்பாவிடம் கொடுக்க, அம்மாவுக்கு ஒரே கலக்கம்.

"என்னங்க, இவ்வளவு பணத்தை மாசாமாசம் கட்ட முடியுமா?" என்று கேட்டாள்.

"எப்படியோ கட்டிக்கலாம் வா" என்று அப்பா சமாதானம் சொல்ல வீடு வந்து சேர்ந்தோம்.

கையோடு முனுசாமி டெய்லரிடம் தைக்கக் கொடுத்தோம். என் சட்டை, டிராயர் துணி



களைப் பலமுறை தடவிப் பார்த்து விட்டுத் திரும்பினேன்.

தீபப் பண்டிகை வந்தது. மாமாவும் மாமியும் வந்திருந்தார்கள். பை நிறைய பட்டாசு, பட்சணம், பழம் வாங்கி வந்திருந்தார்கள். எல்லாம் சேர்த்து பத்து ரூபாய் தான் என்று மாமா சொன்னதும், "எதற்கு இத்தனை விலை கொடுத்து வாங்கினாய்?" என்று அம்மா கடிந்து கொண்டாள்.

அப்பா அகல் விளக்கெல்லாம் எடுத்துத் தர, நானும் அக்காவும் சியக்காய்த் தூள் போட்டுக் கழுவி, துடைச்சு வெயில்ல வைச்சோம். அம்மா எண்ணெய்த் திரி போட்டுத்தர, வீடெல்லாம் ஏத்தி வைச்சோம். வீடு முழுக்க வெல்லப்பாகு வாசனையா இருந்தது.

மாமா ஊருக்குக் கிளம்பும்போது எனக்கு ஒரு ரூபாய் ஒன்பதணா அதாவது நூறு ஓட்டைக் காலணாக்கள் கொடுத்தார். நான் அவ்வளவு காசை ஒன்றாய்ப் பார்த்ததே கிடையாது. ஒரே சந்தோஷம். திரும்பத் திரும்ப எண்ணினேன். ஒரு பெரிய டப்பாவில் போட்டு சாமியிடம் வைத்திருந்தேன். தெருவிலுள்ள பசங்க பல பேர் அதை வந்து வேடிக்கை பார்த்துவிட்டுப் போனார்கள். பையன்களிலேயே நான் தான் பெரிய பணக்காரன் என்ற எண்ணத்தில் பெரிய கர்வம் ஏற்பட்டது.

அக்காவுக்குத் திருமணம் நிச்சயமானது. பணத்துக்கு அப்பா ரொம்ப கஷ்டப்பட்டார். கடைசியில் ஒரு புஞ்சை நிலத்தை நானூற்று ஐம்பது ரூபாய்க்கு விற்று ஜாம் ஜாம் என்று கல்யாணத்தை நடத்தி முடித்தார். 'பளபள' என்று பட்டன் வைத்த சட்டையும் முதல் முறையாக பேண்டும் போட்டுக்கொண்ட நான், கல்யாணம் முடியும் வரை கழற்றவே இல்லை. அதெல்லாம் ஒரு காலம்.

பெங்களூரிலிருந்து வந்திருந்த என் மகனும் மருமகளும் வீட்டில் எல்லோருக்கும் துணிகள் வாங்கி வந்து டேபிள் மேல் வைத்தார்கள். "எவ்வளவாச்சுப்பா?" என்று கேட்டேன். "பெரிசா ஒண்ணுமில்லேப்பா. இருபதாயிரம் ரூபாய் தான்" என்று சொன்னான். பழைய டி.வியைக் கொடுத்துவிட்டு சோனி டி.வி வாங்கி வந்தான். விலை இருபத்தி ஏழாயிரம் ரூபாய்தானாம். 'இன்னும் நல்லதா வாங்கியிருக்கலாம்' என்று குறைபட்டுக் கொண்டாள் என் மருமகள்.

பெங்களூர் மருமகனுக்கு டிரஸ் வாங்கி வந்தாள் என் மகள். லீ ஜீன்ஸும், ஏரோ ஷர்ட்டும் இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் என பில் சொன்னது. "நல்லாயிருக்கா?" என்று கேட்டபோது, "நைஸ்" என்று ஒரே வார்த்தையில் சொல்லிவிட்டு, டி.வி பார்க்க ஆரம்பித்துவிட்டான்.

அறைக்குள் சென்று எனது பெட்டியைத் திறந்து பார்த்தேன். உள்ளேயிருந்த ஓட்டைக் காலணாக்களும் ஓரணா, இரண்டணா நாணயங்களும் என்னைப் பார்த்துச் சிரித்தன. ○



"கல்யாணி பீட்ஸா, குறிஞ்சி நூடுல்ஸ்னு புதுசா நிறைய அறிமுகம் செஞ்சுருந்தாங்க!"

"அப்படி எல்லாம் ராகம் இருக்கா என்ன?"

"நான் சொல்றது சபா கேன்டீன்ல!"

- அம்பைதேவா

# தூள் துக்கடா!


* அசோக் ரமணி

* பாபநாசம் அசோக் ரமணி இவ்வாண்டு தமது பதினைந்து கச்சேரிகளையும் புது மாதிரியாக அமைத்துக் கொண்டிருக்கிறாராம். ஒன்றில் தீக்ஷிதர் கிருதிகள் மட்டும்; மற்றதில் கோபாலகிருஷ்ணபாரதி மட்டும்... இப்படி....

* சஞ்சய் சுப்பிரமணியன் பற்றி 80 நிமிட டாகுமென்ட்ரி படம் ஒன்றை பிரசன்னா ராமசுவாமி தயாரித்து வருகிறார்.

* டி.எம். கிருஷ்ணா உடுத்தும் பட்டை சரிகைக்கரை வேட்டிகளை அவருக்கு சிபாரிசு செய்பவர், வயலின் கலைஞர் ஆர்.கே.ஸ்ரீராம் குமார்.


* ஷஷாங்க்

* நித்யஸ்ரீ மகாதேவனின் ரசிகர்களுக்கு ஏமாற்றமான ஒரு சேதி. இந்த வருட இசை விழாவில் அவர் ஒரு கச்சேரி கூட ஒப்புக் கொள்ளவில்லை. இரண்டாவது குழந்தைக்குத் தாயாகப் போகிறார்.

* ஹார்வர்டு பல்கலைக் கழகத்தில் 'ஹார்வர்டு யுனிவர்சிட்டி சங்கீத்' என்ற அமைப்பைத் துவக்கி இருக்கிறார்கள். இந்த அமைப்பால் கௌரவிக்கப்பட்ட முதல் இந்திய இசை மேதை பண்டிட் ரவிசங்கர். அடுத்ததாக இப்போது சித்ர வீணை ரவிகிரண் கௌரவிக்கப்பட்டிருக்கிறார்.

* ஷஷாங்க், கடந்த ஐந்து மாதங்களாக


* ஓ.எஸ். அருண்



* நித்யஸ்ரீ குழந்தையுடன்...

படம் : ஸ்ரீஹரி

ஹிந்துஸ்தானி இசையை கற்றுக்கொண்டு வருகிறார். குரு: பண்டிட் ஜஸ்ராஜ்.

* அனிதா ரத்னத்தின் லேட்டஸ்ட் படைப்பு 'ஆரிய தாரா.' பௌத்தமதக் கடவுளின் பெயர் தாரா. இதில் கௌதம புத்தரது தியானத்துக்குரிய இசையைப் பயன்படுத்தி இருக்கிறார்.

* ஓ.எஸ்.அருண், சமையலில் கெட்டிக்காரர். நம் ஊர் சாம்பார், ரசம் மட்டுமில்லாமல், வட இந்திய ஐட்டங்கள் சமைப்பதிலும் வல்லவர். இவருடைய இன்னொரு விருப்பம் பழைய பாட்டுகளைக் கேட்பது. இதில் நம் ஊர் பி.பி.சீனிவாஸ், வடக்கே முகமது ரஃபி என்று ஆரம்பித்து, மேற்கத்திய பீட்டல்ஸ் வரை அடக்கம்.

* மதுரை டி.என். சேஷகோபாலன், ஹரிகதா காலட்சேபம் செய்து வருவது பழைய சேதி. அண்மையில் உடுப்பியில், ராமர் மீது தியாகராயர் பாடிய கீர்த்தனைகளைக் கொண்டு, ராமாயண ஹரிகதையை ஆங்கிலத்தில் காலட்சேபம் செய்திருக்கிறார்.



* முரளி

* போனவருடம் சென்னை மாநகரின் பல்வேறு கலை, கலாசார அமைப்புகளின் உதவியுடன் இருநூறு இசை மற்றும் இலக்கிய நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்து, வெற்றிகரமாய் நடத்தி முடித்தார் ஸ்ரீகிருஷ்ணா ஸ்வீட்ஸ் முரளி. 2006-ம் ஆண்டில் தினம் ஒரு நிகழ்ச்சி வீதம் 365 நிகழ்ச்சிகள் நடத்துவதற்குத் திட்டமிட்டிருக்கிறாராம்!

தொகுப்பு : சி.எம். சித்தார்த்



* ரவிகிரண்



* சஞ்சய் சுப்ரமணியன்






அந்த மனுஷரும் எனக்குத் தெரிந்தவர்தான். மன்னார்குடிக்குப் பக்கத்தில் தும்பைவனம் என்று ஒரு கிராமம் இருக்கிறது. அந்த ஊரில் அவர் மிராசுதார்; கோபாலசாமி என்று பெயர். இளம் வயதுதான். அவருடைய கல்யாணத்துக்குக்கூட நான் தவுல் வாசித்திருக்கிறேன். கல்யாணம் நடந்து அப்போது ஐந்தாறு வருஷத்துக்குமேல் இருக்கும். அவருக்குக் குழந்தைகளும் உண்டு.

இந்த மனுஷருக்கும் பவானிக்குந்தான் விதிவசத்தினால் தொடர்பு ஏற்பட்டது. அவர்கள் மறுபடியும் எப்படிச் சந்தித்தார்கள்? சிநேகம் எப்படி வளர்ந்தது என்பதெல்லாம் எனக்குத் தெரியாது. விதி இருக்கும்போது எப்படியாவது வழியும் ஏற்பட்டுவிடுகிறது. பவானியின் ஞானப் பைத்தியம் நீங்கி விட்டது என்ற பிரஸ்தாபம் மட்டும் எங்கும் பரவியது. அதோடு தும்பைவனம் கோபாலசாமி முதலியாரின் பெயரும் தஞ்சாவூர் ஜில்லாவெங்கும் அடிபட்டது.

இந்தச் செய்தியெல்லாம் எனக்கு அவ்வளவு நிம்மதி அளிக்கவில்லை. என்னுடைய அபிப்பிராயந்தான் உங்களுக்குத் தெரியுமே? இம்மாதிரி ஒரு ஜாதியும் இந்த மாதிரி ஒரு தொழிலும் கூடவே கூடாது என்பதுதான். 'கடைசியில் இப்படித்தானா ஆகவேண்டும்? யாரையாவது ஒழுங்காகக் கல்யாணம் செய்து கொண்டிருக்கக் கூடாதா?' என்று எண்ணினேன். கோபால்சாமி முதலியாரின் மனைவி, மக்களை நினைத்தும் வருத்தப்பட்டேன். இதையெல்லாவற்றையும் விட, இந்த சிநேகிதத்தினால் பவானியின் தெய்வீக சங்கீதத்துக்குக் கேடு வராமலிருக்க வேண்டுமே என்ற கவலையும் உண்டாயிற்று.

நல்லவேளையாக, அப்படி ஒன்றும் நேரவில்லை. கோபாலசாமி முதலியார் நல்ல சங்கீத ரஸிகர். அதோடு பவானியின் பாட்டைக் குறித்து அவருக்கு ரொம்பப் பெருமையும் இருந்தது. என்னிடம் ஒரு சமயம் அவர் சொன்னது நன்றாய் ஞாபகமிருக்கிறது; 'பவானியை மற்ற மனிதர்களைப் படைத்தது போல் பிரம்மா படைக்கவில்லை; கல்யாணியையும் மோகனத்தையும் செஞ்சுருட்டியையும் சேர்த்துப் படைத்திருக்கிறார்! நீர் வேண்டுமானால், பாரும்! பவானி செத்துப் போகும்போது, அவளுடைய உடம்பு அப்படியே கரைந்து உருகி ராகங்களாகப் போய்விடும்!' என்று கோபாலசாமி முதலியார் சொன்னபோது, 'இருக்கலாம்; ஆனால் அதை நீங்களும் நானும் பார்க்க மாட்டோம். நமக்குப் பிறகு பவானி ரொம்ப காலம் பாடிக் கொண்டிருக்கும்' என்றேன். ஆனால் வருங்காலத்தையறியும் சக்தியைப் பகவான் நமக்குக் கொடுக்கவில்லையே? கொடுத்திருந்தால் உலகத்திலே துன்பம் ஏது? இன்பந்தான் ஏது?

ஆமாம்; பவானியின் சங்கீதத்தைப் பற்றியல்லவா சொல்லிக்கொண்டு வந்தேன்? அவளுடைய சங்கீதம் மேலும் மேலும் பிரமாதமாகிக் கொண்டுதான் வந்தது. ஆனால், என்னுடைய பழகிய காதுக்கு அதில் என்னவெல்லாமோ அதிசயமான மாறுதல்கள் தோன்றின. ஒரு கச்சேரியைப் போல் இன்னொரு கச்சேரி

## கந்தப்ப பிள்ளை சொன்ன கதைகள் - 8

இராது. ஒரு நாள் அவளுடைய பாட்டில் குதூகலம் பொங்கித் ததும்பும். காலை வேளையில் உதயசூரியனை வரவேற்கும் புள்ளினங்களின் குரலிலுள்ள ஆனந் தமும், பௌர்ணமியன்று வெண்ணில வைக் கண்டு பொங்கும் கடலின் ஆரவார உற்சாகமும் தொனிக்கும். இன்னொரு நாள் கச்சேரியிலோ, அவளுடைய பாட்டைக் கேட்கும்போது உள்ள மானது காரணந் தெரியாத சோகத்தை அடையும். தாயைப் பிரிந்த குழந்தையின் தீனக் குரலையும், பகவானைப் பிரிந்த பக்தனின் தாபக் கதறலையும் அவளுடைய பாட்டிலே கேட்பது போல் இருக்கும். அவள் வீணை வாசிக்கும்போது, கையி லுள்ள வாத்தியத்தின் கம்பி களைத்தான் மீட்டுகிறாளா, அல்லது கேட்பவர்களின் இருதய வீணையின் கம்பியைத் தான் மீட்டுகிறாளா என்ற சந்தேகம் தோன்றும்.



முதலில், இதெல்லாம் எனக்கு விந்தை யாயிருந்தது; விளங்காத மர்மமாயிருந்தது. அப்புறம் அப்புறம், ஒருவாறு விஷயம் புரிந்தது.

அன்பு, காதல் என்று சொல்கிறார் களே, ஸ்வாமி, ரொம்ப அதிசயமான காரியம். காதலில் மனிதர்கள் அடைவது என்ன? துன்பமா? இன்பமா? சொல்ல முடியாத துயரமா? அளவிடமுடியாத ஆனந்தமா?

பவானியையும், தும்பைவனம் முதலியாரையும் பற்றி நான் கேள்விப் பட்ட விஷயங்கள் இம்மாதிரி சந்தேகங் களையெல்லாம் உண்டாக்கின. அவர்கள் சந்தோஷமாயிருந்த காலம் அதிகமா, சண்டை போட்டுக்கொண்டு வேதனை யில் முழுகியிருந்த நாட்கள் அதிகமா என்று சொல்ல முடியாமலிருந்தது. 'இந்தப் பெண்ணுக்கு ஏதோ பிடித்திருக்கிறது தம்பி!' என்று அவள் தாயார் சொன் னாள். சில சமயம் பவானி எல்லார் மேலும் எரிந்து எரிந்து விழுவாளாம். சின்னச் சின்னக் காரியத்துக்கெல்லாம் ரகளை செய்வாளாம்; கூச்சல் போடு வாளாம். முகத்தைக் கூட அலம்பிக் கொள்ளாமல் பிரமஹத்தி பிடித்தது போல் உட்கார்ந்திருப்பாளாம். இன்னும் சில சமயம் இதற்கு நேர்மாறாக இருக்கு மாம். பிரமாதமாக அலங்காரம் செய்து கொள்வாளாம். ஒரே சிரிப்பும் குதூ கலமுமாயிருப்பாளாம். இதையெல்லாம் அறிந்தபோது, பவானியின் சங்கீதத்தில் தொனித்த மாறுதல்களின் காரணத்தை ஒருவாறு அறிந்தேன். 'யாராவது மந்திரவாதியை அழைத்து வந்து பார்க்கச் சொல்லலாமா?' என்று பவானியின் தாயார் கேட்டதற்கு, 'மந்திரமும் வேண் டாம், மாயமும் வேண்டாம். நாளடைவில் எல்லாம் தானே சரியாய்ப் போய்விடும்' என்று சொல்லிவிட்டு வந்தேன்.

இரண்டு மூன்று வருஷங்கள் சென்றன. இந்தக் காலத்தில் தும்பைவனம் முதலி யாருடைய சொந்தக் காரியங்கள் ரொம் பவும் சீர்கெட்டு



**அமரர் கல்கி**

வந்தன. அவருக்கு விரோதிகள் அதிகமாகி வந்தார்கள். பவானி விஷயத்தில் எத்தனையோ பணக்காரப் பிரபுக்களுக்கு அபிப்பிராயம் இருந்திருக்குமென்பது எதிர்பார்க்கக் கூடியது தானே? அவர்களெல்லாம் கோபாலசாமி முதலியாரைத் தீர்த்துக் கட்டிவிடுவதென்று கங்கணம் கட்டிக்கொண்டார்கள். முதலில் ஒரு கோவில் பஞ்சாயத்து சம்பந்தமாகக் கேஸ் ஏற்பட்டது. அந்தக் கோவில் தர்மகர்த்தாக்கள் மூன்று பேரில் கோபாலசாமி முதலியார் ஒருவர். மற்ற இரண்டு பேரும் இவரைத் தள்ளிவிட்டுக் காரியங்களை நடத்தியதுடன், கோவில் உற்சவத்தின்போது இவரை அவமரியாதையாக நடத்தி விட்டார்கள். கோபாலசாமிக்குக் கோபம் வந்து கேஸ் போட்டார். இதிலிருந்து சிவில் கேஸுகளும் கிரிமினல் கேஸுகளும் முளைத்துக்கொண்டே இருந்தன. அக்கம் பக்கத்து மிராசுதார்கள், பிரபுக்கள் எல்லாரும் கோபாலசாமியைத் தொலைத்து விட்டு மறுகாரியம் பார்ப்பது என்று கங்கணம் கட்டிக்கொண்டு, பிடிவாதமாக வேலை செய்தார்கள். கோபாலசாமிக்கு நாளுக்கு நாள் கடன் முற்றிக்கொண்டு வந்தது. வருஷா வருஷம் நிலத்தை விற்றுக்கொண்டு வந்தார்.

ஒரு தடவை தும்பைவனம் கோவில் உற்சவத்துக்கு நான் போயிருந்த சமயத்தில், முதலியார் வீட்டுக்குப் போயிருந்தேன். அவர் சம்சாரம் ஐயம்பேட்டைக்குப் பக்கத்து ஊர்ப் பெண்தான். அந்த அம்மாளை எனக்கு நன்றாகத் தெரியும். பாவம்! அவள் ஒரே துக்கத்தில் ஆழ்ந்திருந்தாள். 'கந்தப்பா! இவ்வளவும் அந்தப் பூந்தோட்டத்து மூதேவியால்தான் வந்தது!' என்று



சொல்லிஅழுதாள். எனக்கு மனது ரொம்பவும் கஷ்டப்பட்டது. இந்த மாதிரி ஒரு ஜாதியை நம் தேசத்தில் எதற்காக ஏற்படுத்தினார்கள் என்று எண்ணி மனம் நொந்தேன். அடுத்த தடவை திருவாரூருக்குப் போகும் போது, என் கோபத்தையெல்லாம் பவானியின்மேல் காட்டிவிடுவதென்று தீர்மானித்துக்கொண்டேன். ஆனால், அங்கே போய்ப் பவானியின் நிலையைப் பார்த்தபோது, என் கோபமெல்லாம் பறந்து போய்விட்டது. சோகமே உருவெடுத்தவள் போலிருந்தாள். 'என்னால் இப்படியெல்லாம் கஷ்டம் அவருக்கு வந்துவிட்டதே!' என்று சொல்லிச் சொல்லி உருகினாள். அவளுக்குச் சமாதானமாக நான், 'நீ என்ன அம்மா செய்தாய்? உன் பேரில் என்ன தப்பு?' என்று திருப்பித் திருப்பிச் சொல்ல வேண்டியிருந்தது.

'அண்ணே! அவரை அவ்விடத்து நிலம் வீடு வாசல் எல்லாவற்றுக்கும் தலை முழுகிவிட்டு இங்கேயே வந்து விடும்படி சொல்லிக் கொண்டிருக்கிறேன். கேட்கமாட்டேனென்கிறார். நீயாவது சொல்லேன்; தினம் பொழுது விடிந்தால் கோர்ட்டுக்குப் போவதே வேலையாகிவிட்டதே? என்னத்திற்காக இந்த மாதிரி வம்புக்கும் தும்புக்கும் போக வேண்டும்? நாலு குடும்பத்தைக் காப்பாற்றுவதற்கு வேண்டிய சொத்து இங்கே இருக்கிறதே? இதையெல்லாம் யார் கட்டிக்கொண்டு போகப் போகிறார்கள்?' என்றாள்.

'அது நடக்கிற காரியமா, தங்கச்சி! அவர் ஆண்பிள்ளை இல்லையா? ரோஸம் இராதா? வீண் வம்புக்கு இழுக்கிறவர்களுக்குப் பயந்துகொண்டு ஊரை விட்டு வந்துவிடுவாரா? அதுவும் இங்கே? அவர் சம்மதித்தாலும் சம்சாரம், குழந்தைகள் இருக்கிறார்களே?' என்றேன்.

பிறகு பவானி, அவருடைய சம்



சாரத்தையும் குழந்தைகளையும் பற்றிக் கேட்டுக்கொண்டு இருந்தான்.

பவானியின் தாயாரிடம் பேசினேன். 'ஏன் அக்கா, என்னத்துக்காக நமக்கு இந்த கெட்ட பெயர்? பவானியினாலே ஒரு பெரிய குடும்பம் அழிந்து போகிறது என்று இந்த லால்ஜி முழுவதும் பேசிக்கொள்கிறார்களே?' என்றேன்.

'யார் என்னத்தையாவது சொல்லட்டும் தம்பி. அவர்கள் இரண்டு பேரையும் பிரிப்பது மகாபாவம். பிரித்தால் என் மகள் உயிரை வைத்துக் கொண்டிருக்க மாட்டாள்' என்றாள்.

'இப்படி எத்தனையோ பேர் சொல்லியிருக்கிறார்கள், அக்கா! நாம் பார்த்ததில்லையா?' என்றேன் நான்.

'பவானியின் சமாச்சாரம் உனக்குத் தெரியாது தம்பி' என்றாள்.

பிறகு, 'இப்பொழுது அவர்களுக்குள் எப்படியிருக்கிறது? முன்னேயெல்லாம் போல் கோபதாபம் உண்டா?' என்று கேட்டேன்.



பவானியின் குணமே அடியோடு மாறிவிட்டதென்றும், அவள் சாந்தமே உருக்கொண்டவளாகி விட்டாள் என்றும் தெரிந்தது. இதற்கு நேர் மாறாகக் கோபாலசாமி முதலியாருக்குக் கோபதாபங்கள் அதிகமாகி வந்தனவாம். அதோடு, அடிக்கடி இல்லாத பொல்லாத சந்தேகங்கள் அவருக்குத் தோன்றி வந்தனவாம். 'இது என்ன மனித - சுபாவம்?' என்று எனக்கு ஆச்சரியமாயிருந்தது. பவானி எதற்காக அவரிடம் அன்பு வைக்க வேண்டும். நிர்பந்தம், கட்டாயம் ஏதாவது உண்டா? தன் மனமொப்பி அவரையே தெய்வம் என்று எண்ணி இருப்பவள் மேல் ஒரு மனிதன் சந்தேகப்படுவதென்றால்?... எனக்கு ரொம்பக் கோபமாயும் வெறுப்பாயுமிருந்தது. நமக்கென்ன வென்று பேசாமல் போய்விட்டேன்.

இதற்கப்புறம், ஏறக்குறைய ஒரு வருஷ காலம் ஏதேதோ அசௌகரியங்களினால் நான் திருவாரூர்ப் பக்கம் போகவில்லை. பவானியின் தாயார் இறந்துபோனாள் என்று தெரிந்ததும், துக்கம் விசாரிப்பதற்குப் போயிருந்தேன். அதற்கப்புறம் அங்கே போவதையே நிறுத்திவிட்டேன். 'நமக்கு என்னத்திற்கு வம்பு?' என்ற எண்ணந்தான் காரணம்.

தும்பைவனம் முதலியாரின் காரியங்கள் வரவரச் சீர்கெட்டு வருகின்றன என்று மட்டும் அடிக்கடி காதில் விழுந்துகொண்டிருந்தது. சென்னைப் பட்டணத்தில் ஹைகோர்ட்டில் அவருக்கு ஒரு பெரிய கேஸ் நடந்து வந்தது. அதில் தோற்றுப் போனால், ஆள் திவால்தான் என்று சொன்னார்கள்.

இப்படியிருக்கும்போதுதான் ஒரு நாள் அந்தப் பயங்கரமான ரயில் விபத்தைப் பற்றிச் செய்தி வந்தது. விழுப்புரத்துக்கும் கடலூருக்கும் நடுவில் ரயில் கவிழ்ந்து



விட்டது. மூன்று வண்டிகள் அடியோடு நாசமாயின. நாற்பது ஐம்பது பேருக்கு மேல் செத்துப் போனார்கள் என்று தெரிந்தது. அந்தக் காலத்திலிருந்தே எனக்குப் பத்திரிகை படிப்பதில் ஆசை உண்டு. அதுவும் இந்தப் பயங்கர ரயில் விபத்து நடந்த சமயத்தில் அதைப் பற்றிய விவரங்களைப் படிப்பதற்காக, வெகு ஆவலுடன் 'சுதேசமித்திரன்' பத்திரிகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். விபத்து நடந்த மறுநாள் பத்திரிகையில் இறந்து போனவர்களின் பெயர் விவர ஜாபிதா வந்திருந்தது. அதில் தும்பைவனம் முதலியாரின் பெயரைப் பார்த்ததும், எனக்கு எப்படி இருந்திருக்கும் என்று நீங்களே கற்பனை செய்து கொள்ள வேண்டியதுதான். உடனே எனக்குப் பூந்தோட்டம் பவானியின் கதிதான் ஞாபகத்திற்கு வந்தது. ஐயோ, அந்தப் பெண் ஒரு வருஷத்திற்குள்ளே தாயாரையும் இழந்து, ஆசை நாயகனையும் இழந்து, அநாதையாகப் போய் விட்டாளே? - இனிமேல், அவளுடைய வாழ்க்கை எப்படியாகுமோ?

கோபாலசாமி முதலியாரின் சம்சாரம், குழந்தைகளின் ஞாபகமும் வந்தது. ஐயோ பாவம்! அவர்களுடைய சொத்தெல்லாம் கோர்ட்டு விவகாரங்களில் தொலைந்து போயிருக்கும். சாப்பாட்டுக்கே கஷ்டப் படும்படியான நிலைமை வந்து விடுமோ என்னமோ?

ஒரு வாரத்துக்கெல்லாம் மன்னார்குடிக்குப் போக வேண்டியிருந்தது. அங்கிருந்து அப்படியே தும்பைவனத்துக்குப் போனேன். முதலியாரின் மனைவி பட்ட துக்கத்தையும் அழுத அழுகையையும் பார்க்கச் சகிக்கவில்லை. தகப்பனாரை இழந்த குழந்தைகளைப் பார்க்கவும் பரிதாபமாய்த்தானிருந்தது. நல்ல வேளையாக, ஊரிலிருந்து அவர்களுடைய தாத்தாவும் பாட்டியும் வந்திருந்தார்கள்! குழந்தைகளை அவர்கள் பார்த்துக்கொண்டதுடன், பெண்ணுக்கும் தேறுதல் கூறினார்கள்: 'என்ன செய்வதடி, அம்மா? உன் தலையெழுத்து அப்படியிருந்தது. குழந்தைகளுக்காக நீ உயிரை வைத்துக் கொண்டிருக்க வேண்டுமோ, இல்லையோ? என்று சொல்லித் தேற்றி, பட்டினி கிடக்காமல் அரை வயிறாவது சாப்பிடும்படியும் பலவந்தப்படுத்தினார்கள். நானும் எனக்குத் தெரிந்த வரையில் ஆறுதல் சொல்லிவிட்டுக் கிளம்பினேன்.

இவர்களைப் பார்த்த பிறகு பவானியையும் அவசியம் பார்க்க வேண்டுமென்று எனக்கு ஆவல் உண்டாயிற்று. நேரே திருவாரூருக்குப் போனேன். அவளுடைய வீட்டுக்குப் போகும்போது, என் மனம் ரொம்பவும் வேதனைப் பட்டது. ஒரே துக்க சாகரத்தில் மூழ்கியிருப்பாளே, எப்படி அவளைப் பார்த்துப் பேசுகிறது, எப்படி ஆறுதல் சொல்கிறது என்று என் மனம் தவித்தது. ஆனால் வீட்டுக்குள் போய் பவானியைப் பார்த்ததும், ஒருவாறு கவலை நீங்கிற்று. ஏனெனில், நான் பயத்துடன் எதிர்பார்த்தபடி அவள் கண்ணீரும் கம்பலையுமாய்ப் படுத்துக் கொண்டிருக்கவில்லை. என்னைக் கண்டதும் அலறி அழவில்லை. சாதாரணமாய்த்தான் இருந்தாள். 'வாருங்க அண்ணே!' என்று ஆர்வத்துடன் என்னை அழைத்தாள்.

(தொடரும்)

# சக்சஸ் ஸ்டோரி

**கர்நாடக இசைத்துறையிலும் திரை இசைத்துறையிலும் 'காஸ்மிக்' முத்துக்குமாரைத் தெரியாதவர்கள் இருக்க முடியாது. இருபத்தைந்து வருடங்களாக இந்தத் துறையில் இவர் சந்திக்காத சுனாமியும் இல்லை; பாராட்டு மழையும் இல்லை. இன்று சினிமா பாடல்கள் அல்லாத வேறு வகையான பாடல்களும் மக்களால் விரும்பப்படுகிறது என்பதற்கு உதாரணமாக இருக்கிறது இவர் தலைமை வகிக்கும் 'காஸ்மிக் மியூஸிக்' ஆடியோ நிறுவனம்.**

எனக்குக் கலைகளில் இயல்பாகவே ஆர்வம் அதிகம். இருபது வயதில் ஹிப்பி ஹேர்ஸ்டைல் வளர்த்து (இப்பவும் உண்டு) ட்ரம்ஸ் பழகி 'காமேஷ் ராஜா' ட்ரூப்பில் இடம்பெற்றிருந்தேன். டணால் தங்கவேலுவின் நாடகங்களிலும் என்னைக் காண முடியும். ஆனால் நான் படித்தது பி.ஈ. மெக்கானிக்கல். வகுப்பு அறைகளில் என் கைகள் சும்மாவே இருக்காது. தாளம் போட்டுக் கொண்டேதான் இருக்கும். கலையெல்லாம் காசுக்கு உதவாது என்று அறிவுறுத்திய குடும்பத்தின் தொல்லை பொறுக்காமல் வேலைக்கு மனு செய்தேன். கடவுளுக்கு என் விருப்பம் புரிந்து விட்டது. கிடைத்தது விற்பனை காரிய தரிசி வேலை. எங்கே தெரியுமா - எச்.எம்.வி. ஆடியோ நிறுவனத்தில்.

எண்பதுகளில் ஆடியோ நிலைமை மிகச் சீராகவே இருந்தது. ஆனால் எச்.எம்.வியில் சில சிக்கல்கள். புதிதாக ஏதும் முயற்சிக்காவிட்டால் முன்னேற முடியாத நிலைமை. 87-ம் வருடம் அதன் தென்னிந்தியாவின் தலைமைப் பொறுப்பு எனக்கு அளிக்கப்பட்டது. இன்று பாப், ரீமிக்ஸ், ப்யூஷன் என்றெல்லாம் சொல்கிறோம். நான் அன்றைக்கே இதெல்லாம் முயற்சி செய்து பார்த்து விட்டேன். எனக்கு 'ஃபாதர் ஆஃப் தமிழ் பாப்' என்றே ஒரு பெயர் உண்டு. 87-ம் வருடம் 'இளமை இனிமை' என்கிற தமிழ் பாப் ஆல்பத்தை சித்ரா, மனோவைக்






# இசைக் கடலில் முத்தெடுத்து...

கொண்டு வெளியிட்டேன். பழைய பாடல்களை அதைப் பாடிய பாடகர்களைக் கொண்டே ரீமிக்ஸ் செய்தேன். 92-ம் வருடம் ஜெயலலிதா முதல்வரானபோது அவர் குன்னக்குடிக்காகப் பாடிய பக்திப் பாடல்கள், சினிமாவில் பாடிய பாடல்கள் அனைத்தையும் ஒரு கேசட்டாகத் தொகுத்து கோட்டைக்குச் சென்று வழங்கினேன். எச்.எம்.வியை மார்க்கெட்டில் நிலைநிறுத்த இதுபோன்ற பல புதுப் பாதைகளில் பயணிக்க வேண்டியிருந்தது.

பின்பு எச்.எம்.வி நிறுவனத்திலிருந்து விலகி, மீடியா ட்ரீம்ஸ் முதன் முதலாக 'ட்ரீம் ஆடியோ' என்கிற ஆடியோ நிறுவனத்தைத் தொடங்கியபோது நான் அதன் இயக்குனராகப் பொறுப்பேற்றேன். முன்பெல்லாம் ஆடியோ சிடி வாங்குவதென்பது கடினமான காரியம். நானூறு ரூபாய் ஆகும். மீடியா ட்ரீம்ஸ் தனியாக சிடி தொழிற்சாலை வைத்திருந்ததால் தடாலடியாக ட்ரீம் ஆடியோவின் சி.டிகளை நூற்றி ஐம்பது ரூபாய்க்குக் குறைத்து விற்றோம். அன்று ஆரம்பித்தது சி.டி விலையின் வீழ்ச்சி. இன்று முப்பது, நாற்பது ரூபாய் வரைக்கும் குறைந்து விட்டது.




என்னுடைய இந்தத் துணிச்சல் பரவலாகப் பேசப்பட, கட்டுமானம், சாப்ட்வேர் போன்ற இதர துறைகளில் கவனம் செலுத்தி வரும் 'காஸ்மிக்' நிறுவனம் என்னை அணுகியது. அவர்கள் புதிதாகத் தொடங்கவிருக்கும் ஆடியோ நிறுவனத்தோடு ட்ரீம்ஸ் ஆடியோவை இணைக்க விரும்பினார்கள். இரு நிறுவனங்களும் கைகுலுக்கிக் கொள்ள, தோன்றியது காஸ்மிக் ஆடியோ.

80, 90'களில் ஆடியோ வியாபாரம் வளமாக இருந்தது. ஆனால் காஸ்மிக் ஆரம்பிக்கப்பட்டபோது படுபாதாளம். ஆயிரம் கோடி ரூபாய்க்குமேல் இருந்த வியாபாரம் இளைத்துப்போய் நானூறு கோடிக்குக் குறைந்தது. ஆடியோவில் உள்ளது போல் பைரசி எங்கும் கிடையாது. முப்பது ரூபாய்க்கு கள்ள மார்க்கெட்டில் ஆடியோ சிடி விற்பது, எம்.பி.3.. போன்ற இடைஞ்சல்கள் இதற்கு ஏராளம்.

இதனால் புதிய ஆடியோ கம்பெனிகள் முளைக்காத இக்கட்டான தருணத்தில் 2002-ம் ஆண்டு தோன்றியது காஸ்மிக்.

ஆரம்பித்த மூன்றே வருடங்களில் காஸ்மிக் புரியாத சாதனைகளே இல்லை. திரையிசையைத் தவிர வேறெந்த இசைக்கும் பரவலாக மார்க்கெட் இல்லாத காலகட்டத்தில் காஸ்மிக்கால் மட்டும் எப்படி முடிந்தது?

முதலில் எந்த மாதிரியான இசை வடிவங்களை உருவாக்குவது என்று யோசித்தோம். முழுவதுமாகத் தமிழ் ஒலி நாடாக்களை மட்டும் வெளியிட்டால் வியாபாரம் திருத்தணி தாண்டாது. சினிமா? அகலக்கால் வேண்டவே வேண்டாம். பக்திப் பாடல்கள்? முருகன் பாடல்கள் என்றால் டி.எம்.எஸ்., சீர்காழி குரல்களும், அம்மன் பாடல்கள் என்றால் எல்.ஆர். ஈஸ்வரி, சுசீலா குரல்களும் மக்கள் மனத்தில் ஏற்கெனவே பதிந்து விட்டன. சரிப்பட்டு வராது. பாடல் கேட்டு நாலு தலை ஆட வேண்டிய இடத்தில் நாற்பது தலை ஆடினால்தான் வியாபாரம் பெருகும்.

நம்புவீர்களா? 'காஸ்மிக்'கில் இது வரைக்கும் கிட்டத்தட்ட நானூறு ஒலி நாடாக்களை வெளியிட்டு சாதனை படைத்துள்ளோம். மாதத்துக்கு நான்கு புதிய ஒலிநாடாக்களுக்குக் குறையாமல் வெளியிடுகிறோம். இதுவரைக்கும் வெளியிட்ட அத்தனையும் ஹிட். எங்கு எக்ஸிபிஷன் நடந்தாலும் அங்கு காஸ்மிக்கின் கேசட்டுகளை மக்கள் அள்ளுகிறார்கள்.

அத்தனையும் புதுமையான ஐடியாக்கள். சினிமா கேசட் மாதிரி ஒரு சீஸனுக்கு மட்டும் விற்கக் கூடாது என்று எண்ணி காலத்துக்கும் ஏற்றமாதிரியான பாடல்களை வெளியிட்டோம். கர்நாடக சங்கீதத்தை மேற்கத்திய தேன் குழைத்து எல்.வி.கணேசன் இசையில் கொடுத்தோம். க்ளிக் ஆனது. ராஜேஷ் வைத்யா, விக்கு விநாயகராம் போன்றவர்களைக் கொண்டு இன்ஸ்ட்ருமெண்டல் ஃப்யூஷன் அளித்தோம். அமோகமாகப் போனது. சமஸ்கிருத ஸ்லோகங்களையும் மேற்கத்திய இசையின் பின்னணியில் வழங்கினோம். சமஸ்கிருத ஒலிநாடாக்களை வெளியிடுவதில் ஒரு பலன் உண்டு. எல்லைகள் கடந்து வியாபாரம் ஆகும். கத்ரி கோபால்நாத், குன்னக்குடி, விக்கு விநாயகராம், ரமணி போன்றவர்களின் அடுத்தடுத்த தலைமுறைகளை வைத்து கேசட்டுகள் வெளியிட்டோம். தமிழையும் மறக்கவில்லை. பாசுரங்கள், நாலாயிர திவ்யபிரபந்தம், சுகன்யாவின் 'அழகு', ஷோபா சந்திரசேகரின் 'சமர்ப்பணம்' என அத்தனையும் நல்ல லாபத்தை அளித்தன.

இன்று காஸ்மிக் என்றால் அதன் படைப்புகளை வாங்க டீலர்கள் ஆர்வமாக இருக்கிறார்கள். ராஜேஷ் வைத்யாவின் 'வாயேஜ்' ஒலிநாடா விற்பனை இருபதாயிரம் எண்ணிக்கையைத் தொட்டது எங்களின் சாதனை. நான் இதுவரை சொன்னது அத்தனையும் எங்களுடைய முதல்படிதான். இசைக்கடலில் மூழ்கி முத்தெடுக்க இனிமேல்தான் ஆரம்பிக்க வேண்டும். அதுவரை முயற்சிகளும் சாதனைகளும் தொடரும்.

- ச.ந.கண்ணன்



"பாடகர் சுருதி சுத்தமா பாட மாட்டேங்கறாரே... ஏன்?"

"சுருதிங்கறது அவர் சம்சாரத்தோட பேராச்சே!"

- அம்பைதேவா

# ஆஞ்சநேயர் விருது!



சென்னையின் பிரதான பகுதிகளில் வசித்தவர்கள் ஒண்டுக் குடித்தனத்தி லிருந்து சொந்தவீடு, ஓய்வு என்று சில பல காரணங்களால் புறநகர்ப் பகுதிகளுக்குக் குடிபெயர்ந்து விட்டனர். சமீபத்திய வெள்ளப்பெருக்கு வரை, அங்கே வாழ்க்கை சௌகரியங்களுக்குக் குறைவில்லையென்றாலும், இசைக் கச்சேரிகள், நாடகம் போன்றவற்றை ரசிக்க வழியில்லாமல் இருந்தது. சென்னை நகர சபாக்களில் நடக்கும் கச்சேரிகளுக்கு வந்தால், கச்சேரி முடிந்தபின் இரவு வீடு திரும்புவது ஒரு பிரச்னையே! இந்தச் சூழ்நிலையில், அந்தந்த புறநகர்ப் பகுதி மக்கள், தங்கள் பகுதியிலேயே சபாக்களைத் துவக்கிவிட்டார்கள்.

இப்படி ஆரம்பிக்கப்பட்ட சபாக்கள் தென்சென்னை புறநகர்ப் பகுதிகளில்தான் அதிகம். ஆதம்பாக்கம், நங்கநல்லூரில் ஆரம்பித்து, தாம்பரம் வரை இன்று சுமார் பத்து, பதினைந்து சபாக்கள் வெற்றிகரமாக இயங்கி வருகின்றன.

மாதம் ஓரிரு நிகழ்ச்சிகள் வழங்குவதை இவை வழக்கமாய்க் கொண்டிருந்தாலும், டிசம்பரில் இசைவிழா நடத்தி அசத்திவிடுகின்றன.

பாபநாசம் சிவன் நூற்றாண்டு விழாவையொட்டி மடிப்பாக்கம் பகுதியில் ஆரம்பிக்கப்பட்ட சபா, பாபநாசம் சிவன் கர்நாடக சங்கீத சபா. 200 பேர் போல உறுப்பினர்கள். ஜனவரி தொடக்கத்தில் பத்து நாட்களுக்கு தினம் இரண்டு கச்சேரிகள் நடக்கின்றன. இவர்களது வருடாந்திர இசை விழா பட்ஜெட் இரண்டரை லட்சம் ரூபாய். இவர்களுக்கு 350 சீட்டுகள் கொண்ட ஹால் சொந்தம். சங்கீத வகுப்புகள் மூலமாக சுமார் எண்பது மாணவ, மாணவிகள் வாய்ப்பாட்டு மற்றும் இசைக் கருவிகள் கற்றுக் கொள்கிறார்கள். "பாபநாசம் சிவன் பெயரில் ஆண்டுதோறும் விருது தருகிறோம். கச்சேரிகளைக் கேட்டு, மடிப்பாக்கம் வாசிகள் மகிழ்கிறார்கள். இசைவிழா செலவுக்கு ஸ்பான்சர் பிடிப்பது சிரமமாக இல்லை. சின்சியராய் எதைச் செய்தாலும், அதற்கு மரியாதை உண்டு! இது என் அனுபவம்" என்கிறார் இந்த சபாவின் ராகவன்.

நங்கநல்லூர் ஆஞ்சநேயர் கோவிலில் ஜனவரியில் நடக்கும் இசைவிழா மிகவும் பிரபலமானது. திருமதி எம்.எஸ். உட்பட இங்கே பாடாத பிரபல வித்வான்களே இல்லை. இங்கேயும் விருது உண்டு. அதற்குரியவரைத் தேர்ந்தெடுக்கும் முறை வித்தியாசமானது. டிரஸ்டிகள் சிபாரிசு செய்யும் பெயர்களை எல்லாம் ஆஞ்சநேயர் சன்னதியில் சீட்டுக் குலுக்கிப் போட்டு, ஒரு சீட்டை எடுக்கிறார்கள். ஆஞ்சநேயரே விருதுக்குரியவரைத் தேர்ந்தெடுப்பதாக நம்புகிறார்கள்!

புறநகர்ப் பகுதியில் புகுந்த வெள்ளத்தால் இசை விழாக்கள் பாதிக்குமா என்று கேட்டால்... "இன்னும் இரண்டு நாள்ல காய்ஞ்சுடுங்க!" என்று பதில் வருகிறது.

- மானஸா




- இந்த வருட 'சங்கீதகலா நிபுண'

# தவிலுக்கு மரியாதை!

"அரித்துவார மங்கலம். கும்பகோணம் அருகே உள்ள சின்ன கிராமம். அந்த ஊரில் அலங்கார வல்லி சமேத ஸ்ரீ பாதாளேஸ்வரர் திருக்கோயில் ரொம்பப் பிரபலம். அந்தக் கோயிலின் சோமாஸ்கந்தர் சந்நிதியில்தான் முதன் முதலா இரண்டு தட்டு தட்டி தவில் வாசிச்சேன். அப்போ எனக்கு ஆறுவயசு!

'பிள்ளைவாள்... உம்ம பையன் உம்மை மாதிரியே நல்லா தவில் வாசிக்கிறான்யா' என்று யாரோ எங்கப்பா குமரவேல் பிள்ளையிடம் போட்டுக் கொடுத்து விட்டார். அவ்வளவுதான்... அப்பாவுக்கு செம கடுப்பு!

எங்க ஊர் போக்குவரத்து வசதியே இல்லாத அத்துவானப் பகுதியாக இருந்தது. பஸ்ஸை கண்ணால பார்க்கிறதுக்கே பத்து கிலோமீட்டர் நடக்கணும். ஆற்றைத் தாண்டிப் போகணும்னா ஓடத்துலதான் போகணும். கால்ல செருப்புப் போடாம, தவிலைத் தூக்கிக்கிட்டு நடக்கிறது அவ்வளவு சுலபமில்லை. பெருசா சம்பாதிக்கவும் முடியாது என்பதால் அப்பாவுக்கு, தம்முடைய பிள்ளைகளும் இந்தத் துறைக்கு வருவதில் கொஞ்சமும் இஷ்டமில்லை.

ஆனால் எனக்குத் தவிலை ரொம்பப் பிடிச்சுருந்தது. பிடிவாதமாகக் கற்றுக் கொள்ள ஆரம்பித்தேன்.

முருகன் சந்நிதியில் நான் தவில் வாசித்ததைக் கேட்டு, ரசித்த பக்தர் ஒருவர் இரண்டு அணா நாணயத்தை அன்பளிப்பாகத் தந்தார். அது தான் என் முதல் சம்பாத்தியம். அம்மாவுக்கு மகனுடைய வித்வத்தில் ஒரே பெருமை!

"இரண்டணாவுக்கும் சூடம் வாங்கி முருகனுக்கு ஏத்துப்பா... அவர்தான் உனக்கு இனி எல்லாமே!" என்றார் அம்மா... அப்படியே செய்தேன்.

நான் முதன்முதலாக தவில் வாசித்த சோமாஸ்கந்தர் சந்நிதியை என்னுடைய செலவில் புதுப்பித்துக் கட்டவிருக்கிறேன். முதல் கட்டப் பணிகள் நடந்து கொண்டிருக்கின்றன.

இருபத்தைந்து கிலோ எடை கொண்டிருந்த நான், கிட்டத்தட்ட பதினேழு கிலோ எடையுள்ள தவிலை, தூக்கமாட்டாமல் தூக்கிச் செல்வதைப் பார்க்கவே அப்பாவுக்குச் சங்கடமாக இருந்திருக்கும் என நினைக்கிறேன். 'என்னாவது பண்ணி, இவனுக்குத் தவில் மீது இருக்கும் மோகத்தைக் குறைக்கணும்'னு தீர்மானம் பண்ணியிருப்பாரோ என்னவோ, வேணும்னே சிரமமான விஷயங்களை வாசிச்சுக்காட்டுவார். நான் தடுமாறினா, குச்சியாலேயே மண்டையிலே அடிப்பார்... இன்னும் காயத் தழும்பெல்லாம் இருக்கு.

'இவன் தலையெழுத்தை மாத்த முடியாது போலிருக்கே!'னு அவரும் நொந்து போய், வித்வான் டி.ஜி சிறுசேரை முத்துக்குமார சுவாமி பிள்ளையிடம் சேர்த்து விட்டார்... என்னுடைய குருநாதர், என்னை மாணவனா மட்டுமில்லாமல், மகனாவும் நடத்தினார்.

தவிலோட எங்க பார்ட்டி ரோட்டுல நிற்கிறதைப் பார்த்தாலே, பஸ்ஸுக்காரன் டபுள் விசில் கொடுத்துடுவான்.. அப்புறமென்ன... தவிலைத் தூக்கிக் கொண்டு நடராஜா சர்வீஸ்தான்! கொஞ்ச நாளாச்சு... திருவிடைமருதூர் வீராசாமி பிள்ளை, திருவெண்காடு சுப்ரமணிய பிள்ளை போன்ற மேஸ்ட்ரோகளுக்கு வாசிக்க ஆரம்பித்தேன். தவிலுக்குக் கொஞ்சம் மவுசு கூடவே, காவித் துணியில் உறை தைச்சு மாட்டினேன். எனக்குப் பெயரும் புகழும் கூட கூட, அதெல்லாம் வர காரணமா இருந்த என்

# ஏ.கே.பழனிவேல்



• மயிலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் சபா வழங்கும் சங்கீத கலா நிபுண விருது பெறுகிறார் பழனிவேல்.

தவிலுக்கு வெல்வெட் துணியால் உறை செய்து அலங்கரித்தேன். இப்போது, ராக் மியூஸிக், நாதலய நாட்டிய நிகழ்ச்சிகள், வெளிநாட்டுக் கச்சேரிகள், என உயர்ந்து சத்குரு ஸ்ரீ தியாக பிரம்ம ஆராதனை விழா கமிட்டி செயலாளர் பொறுப்பிலும் இருக்கிறேன். ரங்கசாமி மூப்பனார், ஜி.கே. வாசன் போன்றவர்களின் ஆதரவால் இசை சம்பந்தப்பட்ட பல நல்ல விஷயங்களைச் செய்து வருகிறேன். நான் உயர உயர என் தவிலுக்கும் கௌரவம் கூடிப்போச்சு!

இன்றைக்கு என்னுடைய தவில் விமானத்தில் பறக்கிறது. அதற்கு என தனி பெட்டி, தனி உதவியாளர். வெளிநாடுகளில் எனக்குத் தரப்படும் அதே வி.ஐ.பி. செக்யூரிட்டி என்னுடைய தவிலுக்கும் கிடைக்கிறது.

சமீபத்தில் டொரண்டோவில் நடந்த கலை நிகழ்ச்சியில், வெளிநாட்டு ரசிகர் ஒருவர் இருபத்தொரு பவுனில் இரட்டை வட தங்கச் சங்கிலி ஒன்றை மேடையில் அணிவித்துப் பாராட்டினார். அதை நான் அப்படியே கழற்றி என் தவிலுக்கு அணிவித்து, சபையை வணங்கியபோது, எல்லோரும் எழுந்து நின்று கரகோஷம் செய்தார்கள்."

- அனு

காவிரி ஆற்றுப்பாசனம் என்பதால், பரமத்தி வேலூர் செழுமையான சிறு நகரமாக உள்ளது. கொடிக்கால் வெற்றிலை, செந்நெல், வாழை, கரும்பு என அத்தனை பணப் பயிர்களும் பரந்த வயல்வெளிகளைப் பச்சை வண்ணத்தில் மாற்றி அமைத்துள்ளன. விவசாயம்தான் ஊரில் பிரதானம். அதிலொரு விவசாயக் குடும்பம், கே.எம். கணேசன் - சம்பூர்ணம் தம்பதி குடும்பம். இருபது வருட கல்கி வாசகர்கள்.

கே.எம். கணேசனுக்கு வயது ஐம்பத்தி ஏழு. அப்பா முத்துசாமிக் கவுண்டர் பரமத்தி வேலூரில் பிரபல வெற்றிலை வியாபாரி. நம்மூர் வெற்றிலையை, வட மாநில பெரு நகரங்களுக்கு ஏற்றுமதி செய்தவர்கள். ஒருவகையில் மகாகவி பாரதியின் கனவு வரிகளுக்கு, நிஜ உருவம் தந்தவர்கள். எஸ்.எஸ்.எல்.சி வரை படித்திருந்த கணேசனுக்கு இருபத்தைந்து வயதில் திருமணம். இல்லறத் துணைவியாக வந்து வாய்க்கப் பெற்றவர் சம்பூர்ணம். மதியழகன் என்கிற ஆண் மகவும் அதற்கு மூன்று வருடம் கழித்து கவிதா என்கிற பெண் மகவும் பிறக்கிறார்கள்.

அப்பா அமைத்துக் கொடுத்திருந்த பாதையில், அவர் சொல்லிச் சென்ற நெறிகளைக் கடைபிடித்தே வியாபாரம் செய்து வந்தார் கணேசன். மோட்டார் வாகனத் தொழிலிலும் ஈடுபட வேண்டும் என்கிற ஆர்வம் அவருக்கு. நாமக்கல் பக்கம் உள்ளவர்களுக்கு மோட்டார் வாகனத் தொழிலில் ஈடுபடுவது என்பது, குதிரை ரேஸில் பணம் கட்டுவது போல. எல்லோர்க்கும் பணம் வந்து கொட்டுமென்று சொல்லிவிட முடியாது. தோல்விகள் வந்து தேன் கொடுக்குகளாய் மாறிக் கொட்டி விடுவதும் உண்டு. வெற்றிலையில் உயர்ந்த பொருளாதாரம், மோட்டார் வாகனத் தொழிலில் சறுக்கிக் கொண்டு போனது.

தொடர் தோல்விகள், குடும்பப் பொருளாதாரச் சரிவு. இரண்டிலிருந்தும் தன்னை சமப்படுத்திக் கொள்ள முடியவில்லை அவரால். மன உளைச்சலுக்கு ஆளாகி, ஒரு கட்டத்தில் சித்த பிரமை பிடித்தவர் போலாகிவிட்டார் கே.எம். கணேசன். முப்பது நாள் மருத்துவமனை வாசம். முன்னூறு நாள் மருந்து மாத்திரை சிகிச்சை. மனைவி சம்பூர்ணம் வேண்டிக் கொண்ட மேல்மருவத்தூர் ஆதிபராசக்தி அவர்களைக் கைவிடவே இல்லை. கணேசன் பூரண குணமாகி, கடந்த பதினைந்து ஆண்டுகளாகத் தெளிவாகவே இயங்கி வருகிறார்.



* கே.எம். கணேசன் குடும்பத்தினர்...



## வாரம் ஒரு வாசகர் குடும்பம்

கணேசனின் மகன் மதியழகன், அமெரிக்காவில் ஒரு கம்பெனியில் சாப்ட்வேர் எஞ்சினியராக நான்கு வருடம் பணியாற்றியிருக்கிறார். பின்னர் அதே நிறுவனத்தின் சென்னை கிளையில் கடந்த

மூன்றாண்டுகளாக மென்பொருள் பொறியாளராகப் பணிபுரிந்து வருகிறார். சம்பூர்ணம், மேல்மருவத்தூர் ஆதிபராசக்தி பக்தை. கடந்த பதின்மூன்று வருடங்களாக இருமுடி கட்டிக்கொண்டு மேல்மருவத்தூர் சென்று வருகிறார். சென்ற ஆண்டு நவராத்திரி விழாவின் போது, ஆதிபராசக்தி கோயில் வளாகத்தில் பொங்கல் வைத்து சுவாமி கும்பிட்டுள்ளனர் அவர்கள். அப்பொழுது, வீடு சென்றதும் ''நல்ல செய்தி ஒன்று கொண்டு வந்து தா தாயே!'' என வேண்டி



# வாசிக்க... நேசிக்க...

னாராம் சம்பூர்ணம். ஊர் திரும்பிய மறு நாள் காலை, அவர்களது மகள் கவிதாவைப் பெண் கேட்டு வந்துள்ளனர். மாப்பிள்ளை தேவசங்கர் கம்ப்யூட்டர் டிசைனர். சென்னையில் வேலை. நல்ல இடம். உடன் சம்பந்தம் பேசி மணம் முடித்து வைத்து விட்டார்கள் மகளுக்கு. "எல்லாம் ஆதிபராசக்தி அருள்" என்று மெய் சிலிர்க்கிறார் சம்பூர்ணம்.

ஜோடர்பாளையத்தில் அவரது உறவினர் வீட்டுக்குச் சென்றிருக்கும் சமயங்களில், பள்ளி மாணவியாய் இருந்தபோது கல்கி வாசித்திருக்கிறார் அவர். பின்னர் சம்பூர்ணம், பரமத்தி வேலூருக்குத் திருமணமாகி வந்து பன்னிரண்டு ஆண்டுகள் உருண்டோடின. பின்னர், வீட்டில் பெரியவர்களும், பிள்ளைகளும் என சகல தரப்பினரும் வாசிப்பதற்கென அவர்கள் வாங்கிய வார இதழ் கல்கி. "வாசிக்க மட்டுமல்ல இந்தப் பத்திரிகை; வாழ்க்கையை நேசிக்கவும் வைக்கிறது! கல்கி வார இதழ்" என்கிறார் சம்பூர்ணம்.

"அப்போது கல்கி நடத்திய குறுநாவல் போட்டியில் மேலாண்மை பொன்னுச்சாமியின் படைப்புக்கு முதல் பரிசு கிடைத்திருக்கிறது. அந்தக் குறுநாவல் கல்கியில் தொடராக வெளி வந்தது. அவரது எழுத்தும், கரிசல் மண் பாத்திரப் படைப்புகளும் என் மனத்தை விட்டு அகலவில்லை" என்கிறார் இந்த விவசாய வாசகர் கே.எம். கணேசன். இவரது மைத்துனர் குழந்தைசாமி மற்றும் மைத்துனரின் மகன் வினோத்குமார் ஆகிய இருவரும் இவர்களுடனே வசித்து வருகின்றனர். குழந்தைசாமிக்கு, கல்கியில் தலையங்கமும் கவர் ஸ்டோரியும் பிடித்திருக்கின்றன. ஒன்பதாம் வகுப்பு படித்திருக்கும் வினோத்குமாருக்கு எலெக்ட்ரிக் கடையில் வேலை. வினோத்குமாருக்கு, கல்கியில் சினிமா தகவல்கள், கட்டுரைகள் மிகுந்த கண்ணியத்துடன் பிரசுரம் பெறுவது வாசிக்கப் பிடித்திருக்கிறது. அது போல சினிமா விமர்சனங்கள். "ஒரு சினிமாவைப் பார்க்கலாமா வேண்டாமா என்பதற்கு கல்கி விமர்சனத்தைப் படித்தாலே போதும். எஸ்.ஜே. சூர்யாவின் 'நியூ' பட விமர்சனம் படித்த பின்னர், இதுவரை அந்தப் படத்தைப் பார்க்கவே இல்லை!'' என்கிறார் வினோத்குமார்.

கட்டுரை, படங்கள்:
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

*'காளிங்க நர்த்தனம்*
*என் சாகஸம்!*
*காலங்களின் நர்த்தனம்*
*என் மானஸம்!'*

**- ஸ்ரீ கிருஷ்ணன்**

# எங்கே என் கண்ணன்?



## இந்திரா செளந்தர்ராஜன்

சுதாமன் என்று சொல்லிச் சென்ற அந்த நபரின் பேச்சும் சரி, செய்கைகளும் சரி அனுராதா வரையில் ஒரு மாறுபட்ட ஒன்றாகவே இருந்தன. அந்த உணர்வு மாறாமல் கணேஷ் பக்கம் திரும்பினாள். அவன் முகத்தில் வலி, வேதனை... அதற்கு நடுவிலும் ஒரு சிகரெட்டைப் பற்ற வைக்கும் முயற்சி.

"நல்லாருக்கு.... இந்த நிலைல சிகரெட்டா? ஆமா எப்படி இப்படி?" - என்றபடியே அவள் அவனை முறைக்க அவனும் சிகரெட்டை உதட்டில் இருந்து பிரித்து கையில் பிடித்துக்கொண்டான். அப்படியே ஒரு மாதிரி கலக்கத்துடன் பார்த்தான்.

"அதை முதல்ல கீழ போடுங்க... உங்களுக்கு இப்ப கொஞ்சம் கூட டைமே சரி இல்லைன்னு தான் நான் நினைக்கறேன். மும்பை போக ஆசைப்பட்டீங்க, முடியல. வெளியில போய்ட்டு அடிபட்டு வந்து நிக்கறீங்க... மிஸ்டர் கணேஷ் எப்படி ஆச்சு இப்படி?"

- அவன் டைம் சரி இல்லை என்று சொன்னது அவளைக் கிறியது.

"என்ன அனுராதா... டைம் எப்படி சரி இல்லாம போகும். ஒரு நாள் ஒரே ஒரு நாள் சூரியன் உதிக்காம இருந்திருக்கா? மதியப் பொழுது, மாலைப் பொழுதுன்னு பொழுதுகள் வராம போயிருக்கா... இல்ல அந்தப் பொழுதுகள்தான் லேட்டாவோ இல்ல ஃபாஸ்டாவோ வந்திருக்கா... டைம் எப்பவுமே சரியாத் தானே இருக்கு?

- அந்த நிலையிலும் அவளிடம் அவன் அவளை மடக்குவது போல கேட்டதில் நிறையவே உட்பொருள்.

"நான் காலப் பொழுதைச் சொல்லலை... உங்களுக்கான பொழுதைச் சொன்னேன்..." என்றாள்.

"எனக்கு இன்னிக்குக் கொஞ்சம் ஏமாற்றமான நாள்தான். இப்படி அடிபடும்னும் நினைக்கல... அதுக்காக டைம் சரியில்லைன்னுல்லாம் நான் நினைக்க மாட்டேன். இதெல்லாம் பார்ட் ஆஃப் லைஃப். மனசு ரொம்ப கனத்து ஒரு மாதிரி சோர்வு தட்டும்போது ஒரு சிகரெட் பிடிச்சா கொஞ்சம் அது லேசான மாதிரி ஒரு ஃபீலிங். தட்ஸ் ஆல்... நான் எப்பவும் சிகரெட் பிடிக்கற ஸ்மோக்கர் இல்லை..."

- அவன் பேச்சு ஒரு மாதிரியான சமாளிப்பாகத்தான் இருந்தது.

"ம்... அப்புறமா ஒரு விஷயம்... நீங்க வெளிய போயிருந்தப்போ உங்க ஆடிட்டர் போன் பண்ணினார். நான் பேசினது அவருக்கு ஆச்சரியமா இருந்திருக்கும்... என்ன விஷயம்னு தெரியல... அப்புறமா போன் பண்றேன்னார்..." என்றவள் தொடர்ந்து,

"மிஸ்டர் கணேஷ்... ஒரு விஷயம்... இந்த மூங்கில் பெட்டியிலுள்ள ஏடுகள்ள உள்ள கையெழுத்துக்கும் உங்க கையெழுத்துக்கும் நிச்சயம் ஒரு தொடர்பு இருக்கு. ஜஸ்ட் இது ஒரு கோ இன்சிடெண்டுனு என்னால நினைக்க முடியல. இந்த பாக்ஸ், இதோட டிராவல் இது இங்க இப்படி தங்கிடறதுக்கெல்லாம் சரியான ஒரு காரணம் இருக்கற மாதிரி தான் என் உள்ளுணர்வு நினைக்குது. நீங்க இப்படி கால்ல அடிபட்டு இங்க உட்காரக்கூட ஒரு சரியான காரணம் இருக்கு... இந்தச் சூழல்ல உங்களோட நான் வந்து சேர்ந்திருக்கறதும் கூட ஒரு தற்செயலான ஒரு விஷயமா தெரியல..."

- அவள் சொன்ன விதம் கணேஷை ஒரு முறை முறைக்கச் செய்தது.



## 20

"முறைக்காதீங்க... இது ஜனநாயக நாடு. நான் கருத்துச் சுதந்திரம் உள்ள ஒரு பத்திரிகையாளர். அந்த அடிப்படைல சொன்னேன்..."

"எது கருத்து... உங்களோட தனிப்பட்ட நம்பிக்கை உணர்வுகளெல்லாமா?"

"ஏன் இருக்கக் கூடாதா?"

"சாரி, மிஸ் அனுராதா... ஏன்தான் ஆன்மிகம்னு வந்தாலே எல்லோரும் இப்படிக் குழப்பிக்கறீங்களோ தெரியல... நீங்க பேசின அவ்வளவு விஷயங்களும் கிட்டதட்ட கடவுள் விஷயங்கள்தான். வெளிப்படுத்தின அவ்வளவும் உங்க நம்பிக்கைகளை... ஆனா அதை கருத்துன்னு சொல்றீங்க... கருத்து எது? நம்பிக்கை எது?னு முதல்ல பிரிச்சு தெரிஞ்சுகிட்டு பேசுங்க..."

அவனிடம் கோபம் தொனித்தது. அவளுக்கும் உடனேயே புரிந்து விட்டது.

"யூ ஆர் ரைட்... நான்தான் கொஞ்சம் தெளிவில்லாம பேசிட்டேன். ஐ ஆம் சாரி... உங்களை ஒரே ஒரு கேள்வி மட்டும் கேட்க விரும்பறேன். இல்ல இவ்வளவு சம்பவம் நடந்துருக்கே... இதெல்லாம் ஜஸ்ட் கோ இன்சிடென்ஸ்"ன்னா நினைக்கறீங்க?..."

"பின்ன... இதுக்குப் பின்னால வேற என்ன இருக்க முடியும்?"

"அது... அது..."

"எது?"

"இல்ல... அந்த ஏட்டுல கண்ணன் வரப் போறான்னு ஒரு குறிப்பு இருக்குது..."

"அவர் வரப் போறதா அந்த ஏடு சொல்லுதா?"

"ஆமாம்... படிச்சுப்பாருங்க..."

"நான் கூட கேள்விப்பட்டிருக்கேன். அதர்மம் அதிகரிக்கும்போது கல்கி அவதாரம் எடுத்து நான் வருவேன்னு சொன்னதா...? அப்ப இப்ப கண்ணன் வரப் போறார்னு சொல்லுங்க..."

"என்ன கணேஷ்... நீங்க கேக்கற தொனியே சரியில்லையே..."

"என்ன... பயபக்தியோட இப்பவே கையைக்கட்டிக்கிட்டு பேசணும்கறீங்களா?"

"அப்படி இல்லை... நாடி ஏடுகளை சாதாரணமா என்னால நினைக்க முடியல. இன்ஃபாக்ட் நம்ம முன்னாள் பிரதமர் ராஜீவ்காந்தியோட மரணத்தை அவர் உயிரோட இருக்கும்போதே நாடி ஜோசியத்துல துல்லியமா சொல்லிட்டாங்க. ஆனா அதை

யாருமே கவனிக்காம விட்டுட்டோம்..."

"லோ... நீங்க கண்ணன் வரப் போறதை நம்பறீங்க... அப்படித்தானே?"

"நான் ஒரு ஜர்னலிஸ்ட். இந்த மாதிரி விஷயங்களை அப்படியும் இப்படியுமா நான் அலசத்தான் செய்வேன்..."

"நல்லா அலசுங்க... ஜோரா அலசுங்க... ஆனா பாவம் நீங்க. கண்ணன் எதுக்குங்க இப்ப போய் வரணும். அதுவும் இங்க? வேடிக்கையா இருக்குங்க உங்க நம்பிக்கை... உலகத்துல எவ்வளவோ அநீதிகள்... அக்ரமங்கள்... அழிவுகள்... அப்ப வராத கண்ணனுக்கு இப்ப என்ன வேலை?

- அவள் கேட்டதிலும் அர்த்தம் இருக்கத்தான் செய்தது... அவன் உடனே மௌனமானான்.

"நாம கடவுளைப் பத்தியே பேசிகிட்டிருக்கோம். எனிவே, எனக்குக் கொஞ்சம் பொழுது போச்சு... என் மனசு இப்ப இருக்கற இருப்புக்கு இப்படிப்பட்ட பேச்சும் ஒரு விதத்துல தேவைதான்..."

- என்றபடி திரும்பவும் சிகரெட்டை எடுத்து உதட்டில் செருகினான். அவள் பதிலுக்கு முறைத்துப் பார்த்தான்.

"ஓ.கே. நான் வெளியபோய் பிடிக்கறேன்..."



"மேடைல ரெண்டு பக்கமும் டி.வி மாட்டியிருக்குதே... எதுக்கு?"

"கச்சேரி நடக்கறப்ப பெண்கள் கூட்டம் கலையாம இருக்க டிவில சீரியல் ஓடும்!"

- அம்பைதேவா

- என்று எழுந்து நடக்க முயன்று வலியால் வாயைப் பிளந்து அப்படியே அமர்ந்தாள். அப்படியே உணர்ச்சி வசப்பட்டுக் கையைக் குத்திப் பிசைந்து கொண்டான்.

"கணேஷ்... டாக்டர்கிட்ட போகலாமா... ரொம்ப பெய்னா இருக்கா?"

"ஆமாம்... வலி உயிர் போகுது... ப்ளீஸ் ஒரு ஆட்டோ பிடிச்சுக்கிட்டு வர்றீங்களா?"

"ஷ்யூர்!" - அவள் உடனே வெளியேறினாள்.

அடுத்த நொடி செல்போன் அலற, காது வழியே ஆடிட்டர் கிருஷ்ணமூர்த்தி ஐயர் நுழைந்தார்.

"கணேஷ்...எங்க போயிருந்தே... யார் அந்தப் பொண்ணு?" - அவரின் ஆரம்பமே படபடப்போடு இருந்தது.

"ஜர்னலிஸ்ட் சார்... தமிழச்சி வேற! உதவி செய்தேன். அதுக்கு மேல எதுவும் இல்லை. நீங்க போன் பண்ணினதாவும் சொன்னாங்க அவங்க. என்ன சார் விஷயம்?"

"அது சரி... உன் குரல்ல ஏன் இவ்வளவு முக்கல் முனகல்..?"

"வலி சார்... நீங்க சொன்ன புது கம்பெனி ஓனரை பார்க்கப் போனேன்... வழியில ஒரு பள்ளம். தாண்டிடலாம்னு நினைச்சது தப்பா போச்சு..."

"ஐய்யய்யோ... பலமான அடியா?"

"எனக்கென்னவோ ஃப்ராக்சர் மாதிரி தெரியுது. உங்க மேலதான் இப்ப என் கோபமெல்லாம். நான் பாட்டுக்கு மும்பைக்குப் போய் என் அப்பாவைத் தேட ஆரம்பிச்சிருப்பேன். என் தங்கைக்கும் உடம்பு சரியில்ல. நான் இப்ப ஊருக்கு வந்தா எவ்வளவு சௌகர்யமா இருக்கும் தெரியுமா என் குடும்பத்துக்கு...?"

"டோண்ட் ஒர்ரி... உன் உதவிக்கு நான் இம்மீடியட்டா ஒருத்தனை அனுப்பி வைக்கறேன். என்னோட லெட்டரோட உன்னை வந்து பார்ப்பான். நீ சிரமப் படாதே. முதல்ல டாக்டரைப் பார்... உன் தங்கை விஷயத்தைப் பத்தியும் கவலைப் படாதே. அந்த நபரை இன்னிக்கே ஃப்ளைட்ல அனுப்பி வைக்கறேன். இங்க என்கிட்ட பிராக்டீஸ் பண்ற ஸ்டூடண்ட்ஸ் யாரையாவது தான் அனுப்புவேன்..."

"சரி சார்... வேற ஏதாவது முக்கிய விஷயமா?"

"அதெல்லாம் ஒண்ணுமில்லை... போன முறை போன் பண்ணப்போ மிஸ்டர் ஸ்ரீனிவாசன் பத்தி எதுவுமே கேட்காம விட்டுட்

டேன். அவர் நல்லபடியா புறப்பட்டுப் போயிட்டாரா?"

"இந்த நிமிஷம் அவர் டெல்லியை நெருங்கியிருப்பார். போற அவசரத்துல அவர் பூஜை செய்யற மூங்கில் பெட்டியை சாமியோட இங்க விட்டுட்டுப் போயிட்டார். இப்ப அதுதான் சிக்கல்..."

"அப்படியா... அந்தப் பெட்டிக்காகவும் தினசரி பூஜைக்காகவும் தானே அவர் என் உதவி, உன் உதவின்னு எல்லார் உதவியையுமே கேட்டார். இப்ப அதை எப்படி மறந்துட்டுப் போனார்...?

"மறக்கலை சார்... பெட்டி மாறிப் போச்சு..."

"எப்படிப்பா... அவர் உயிரையே விட்டு வாரே"

"அதுக்கு நான் என்ன சார் பண்ண முடியும்?"

"இல்ல கணேஷ், அது சாதாரண பெட்டி இல்ல... அவரோட ஆத்மா அது. நீ அதைப் பத்திரமா வெச்சுக்கோ. அவர் கேட்டா பத்திரமா இருக்கறதா சொல்."

"சொல்றேன் சார்..."

- மறுமுனையில் ஆடிட்டர் தொடர்பைத் துண்டித்துக்கொண்டுவிட அவன் காதுக்குள்ளும் அமைதி ஏற்பட்டது.

ஆனால் கணேஷ் மனத்துக்குள் பூச்சி பறக்க ஆரம்பித்தது. அதே சமயம் ஆட்டோ வந்து வாசலில் நின்றது. கணேஷ், அனுராதாவுடன் டாக்டரைப் பார்க்க புறப்பட்டான்.

**ந**ல்ல மாலை நேரம்!

சூரியன் மேற்கில் புதைந்து கொண்டிருந்தான். பத்ரிநாத்தின் கங்கைக் கரையில் நின்று பார்க்க மிகப் பரவசமாக இருந்தது. தொட்டுத் தொட்டு கணவனும் மனைவியும் பத்ரி வரை எப்படியோ வந்து விட்டனர்... கிருஷ்ணமூர்த்தி ஐயர் அங்கும் ஒரு ஆஸ்ரமத்தில் தங்கிட கடிதம் கொடுத்திருந்தார். அதன் உதவியோடு ஆஸ்ரம அறையில் மூட்டை முடிச்சுக்களை வைத்தவர்கள் அடுத்த நொடியே கங்கை நீராடலுக்காக ஆற்றங்கரைக்கு வந்து விட்டனர்.

திபுதிபுவென்று நீலத்தாரை நீர்!

சீனு கைகளைக் கூப்பிக்கொண்டார்... பரவசத்தோடு ரசித்தார்... அப்படியே தம்பதி சமேதராக ஓடும் ஆற்றுக்குள் மூழ்கி எழுந்தார்... சில நிமிட காலம் தான்.

"வா ராஜம்... சீக்கிரமா போய் இன்னிக்கு நித்யப்படி திருவாராதனத்தை முடிப்போம்.



''பாடகருக்கு கறுப்புப் பூனை பாதுகாப்பு கொடுத்துருக்கே... ஏன்?''

''சர்ச்சைக்குரிய பேட்டிகள் கொடுத்து நிறைய சபாக்காரங்களைப் பகைச்சுக்கிட்டவராச்சே!''

- அம்பைதேவா

காலம்பர பண்றதுதான் சிலாக்கியம். சாயந்தரம் பண்றது வழக்கமில்லை. ஆனா பயணத்துல இருக்கற நான் அதைப் பார்க்க முடியுமா? அந்தக் கண்ணனும் அதைத் தப்பா எடுத்துக்க மாட்டான்..." - என்று பலமுறை சொன்னதையே அவளிடம் சொல்லிக்கொண்டு படுவேகமாக நடந்தார். ஆஸ்ரமத்துக்குள் நுழையும்போதும் சரியான வேகம்.

"கண்ணா நீ கொடுத்து வெச்சவன்... நேத்து காலம்பற காசில பூஜித்தேன். இன்னிக்கு ஹரித்வார்ல... குணசீலத்தைத் தாண்டாத உனக்கு எத்தனை எத்தனை ஊர்ல பூஜை..." - என்றபடியே மூங்கில் பெட்டியை எடுத்து பயணத்தில் அது திறந்துகொண்டு விடாதபடி கட்டிய துண்டை அவிழ்த்தார். அப்படியே மேல் மூடியைத் திறந்தவருக்கு பக்கென்றது. உள்ளே சில ஆப்பிள் பழங்கள்! கணேஷ் கூடையோடு வரும்போது வாங்கிப் போட்டவை...

"ராஜம்ம்ம்...!" - என்று அலறியவருக்கு அப்படியே வியர்த்துக் கொட்டிட மார்பிலும் இலேசாய் வலி...

(தொடரும்)

# சாகாவரம்

**பல்லவி**

**சா**காவர மருள்வாய், ராமா!
சதுர்மறை நாதா! சரோஜ பாதா!

**சரணங்கள்!**

ஆகாசந் தீகால் நீர்மண்
அத்தனை பூதமும் ஒத்து
நிறைந்தாய்
ஏகாமிர்த மாகிய நின்தாள்
இணைசர ணென்றால் இதுமுடி
யாதோ
(சாகா)

வாகார்தோள் வீரா, தீரா
மன்மத ரூபா வானரர் பூபா,
பாகார்மொழி சீதையின் மென்றோள்
பழகிய மார்பா! பதமலர் சார்பா
(சாகா)

நித்யா, நிர்மலா, ராமா
நிஷ்க ளங்கா, சர்வா தாரா,
சத்யா, சநாதநா ராமா,
சரணம், சரணம், சரண முதாரா!
(சாகா)

- பாரதியார்



**கா**தலை, 'தீ' என்று அழைத்ததன் காரணம், ஒருவரை ஆக்கும் சக்தியும் அழிக்கும் சக்தியும் அதற்கு உண்டு என்பதனால்தான். எந்த வயதிலும் எதனுடனும் காதல் வரலாம் என்றாலும், இளைஞர்களிடையே வரும் காதலைப் பற்றி மட்டும் பேச விரும்புகிறேன். ஏனெனில், நமது சமுதாயத்தில் காதல் வர வர அதிகமாகப் பாதிப்புகளை ஏற்படுத்துகிறது. இதனால் தற்கொலைகள், செயல் திறனில் குறைபாடு போன்ற பெரிய பாதிப்புகள் ஏற்படுவதால், இளைஞர்களைப் பலப்படுத்த வேண்டிய ஒரு காலகட்டத்தில் நாம் இருக்கிறோம்.




பூரணியும் மோஹனும் ஒரே அலுவலகத்தில் வேலை பார்ப்பவர்கள். மோஹனுடைய உதவி செய்யும் குணம், இரக்க சுபாவம் இவையெல்லாம் அவளுக்குப் பிடித்தது.

# அழகிய தீயே...!

பூரணியின் உற்சாகம், பளபளக்கும் கண்கள், சிரிப்பு இவை அவனுக்குப் பிடித்திருந்தன. இருவரும் தீவிரமாகக் காதலிக்க ஆரம்பித்தவுடன் இந்த உலகமே மறந்து போயிற்று.

சில காலம் தான். காதல் வளர, வளர, சண்டையும் வளர்ந்தது. அவர்களைக் கவர்ந்த குணங்களே இப்போது விரும்பத்தகாத குணங்களாக மாறின! பூரணி பிற ஆண்களிடம் சிரித்துப் பேசுவது மோஹனை அவஸ்தைப்படுத்த, அவன் சிடுசிடுக்க ஆரம்பித்தான். அவளும், 'நீ ஏன் எல்லாருக்கும் இளிச்சவாயனா இருக்கே? தரமறிந்து உதவி செய்யணும். இந்த சுப்ரியா மாதிரி ஆளுங்களுக்கு உதவுவதை நிறுத்திக்கோ'



மனநல ஆலோசகர்
பிருந்தா ஜெயராமன்

என்று உரிமையுடன் கண்டிக்க ஆரம்பித்தாள். காதலிக்க ஆரம்பித்து நான்கு ஆண்டுகளில் இந்த விஷயங்கள் பெரிதாகின. 'ரெஸ்டாரண்ட்', 'பீச்' போன்ற பொது இடங்களில் வாக்குவாதம் அதிகரிக்க, நாலு பேருக்குக் கேட்கும்படியாக குரலை உயர்த்திப் பேசுவதும், பிறகு விருட்டென்று தனியே எழுந்து செல்வதும், அதன்பின் அன்று இரவே போனில் அழுது மன்னிப்புக் கேட்டு, சமாதானம் செய்துகொள்வதும் வழக்கமாயிற்று. இருவரது குடும்பங்களுக்கும் உள்ள வேறுபாடுகள் அவர்கள் கண்ணில் பட வழியே இல்லை. காதலில் கட்டுண்டதால் விலகவும் முடியாமல், தொடரவும் முடியாமல் இருவரும் தவித்ததால் வாழ்க்கையில் எல்லாமே பாதிக்கப்பட்டன.

லதா, தன் வீட்டுக்குப் பக்கத்திலிருக்கும் செந்திலை விரும்பினாள். செந்தில் லதாவைவிட படிப்பில் தாழ்ந்து இருந்தான். இது பற்றி இருவரும் பேச, செந்தில் மேலே படிப்பதாக உறுதி கூற, காதல் வளர்ந்தது; ஆனால் செந்தில் வளரவில்லை! லதா முயற்சி செய்து, செய்து நாளடைவில் அலுத்துவிட்டாள். 'இவனை வாழ்நாள் முழுவதும் நான் பின்னாலிருந்து தள்ளிக்கொண்டே போக முடியாது' என்று புரிந்துகொண்டு இந்த உறவைத் துண்டிப்பது என்று தீர்மானித்து, உறுதியாகச் செயல்பட்டாள். சில நாட்கள் அழுகையிலேயே கழிந்தன. பிறகு தேறினாள்.

குரு தன்னுடன் ப்ளஸ் டூ படித்த நந்தினியைக் காதலித்தான். நந்தினி அவனை மற்ற எந்தப் பெண்ணுடனும் பேசக்கூடாது என்றாள். அது அவனுக்குப் பெருமையாக இருந்தது. இருவரும் வெவ்வேறு நகரத்தில் மேல் படிப்பைத் தொடர்ந்தாலும் ஈமெயில் என்கிற வரப்பிரஸாதம் இருக்கிறதே! காதல் தொடர்ந்தது ஈ-மெயிலில் 'ஏன் அவனோடு பேசினாய்? இவனோடு சாப்பிட்டாய்?' என்று சண்டைகள் தொடர, 'இந்தக் காதலியின் அன்பு என்னை மூச்சுத் திணற வைக்கிறது. அவள் எங்கோ இருந்தாலும் என் செயல்களைக் கட்டுப்படுத்துகிறாள்' என்பது புரிய குருவுக்குப் பல வருடங்கள் ஆகின. இருவரும் விடுபட முடியாமல் துன்பப்பட்டார்கள்.



"சங்கீதம் தான் அவருக்கு நாலு தலைமுறையா சாப்பாடு போடுது!"
"அவர் பெரிய சங்கீத வித்வானா?"
"சபாவுல கேன்டீன் நடத்தறார்!"
- அம்பைதேவா

ஆண் பெண் நட்புறவை அங்கீகரிக்கும் காலகட்டம் இது. 'காதல் இல்லாதவர் கட்டைக்குச் சமானம்' என்று இளைஞர்கள் நினைக்கும் காலம். ஆண் பெண் எல்லோரும் நன்கு வேலை பார்ப்பது, வேலை நேரங்கள் மாறுபட்டு, இரவிலும் வேலைக்குப் போகவேண்டிய சூழ்நிலை ஆகியவை ஆண் பெண்ணிடையே ஒரு நெருக்கத்தை உண்டு பண்ணுவதால், உணர்ச்சிவசப்பட்டு காதல் வலையில் பலர் சிக்க நேர்கிறது. வாழ்க்கையில் இரு பாலாருக்கும் கிடைத்த சுதந்திரம், உணர்வுகளுக்குப் போடப்பட்ட சங்கிலிகளை அறுத்துவிட்டது!

மாற்றம் மட்டுமே மாறாதது என்றாலும் சமுதாயத்தில் சில நிலைகளில் அதிகமான மாற்றம் வரவில்லை. ஆண்களுக்கு உள்ள சில சுதந்திரங்களைத்தான் சொல்கிறேன். ('அவன் ஆண்பிள்ளை... அப்படித்தான் என்கிற அளவுகோல் பெண்ணுக்குச் செல்லாது!') தனக்கு வரப்போகும் மனைவி 'கன்னி'யாக இருக்க வேண்டும் என்று பலரும் எதிர்பார்க்கிறார்கள். (கோபப்பட வேண்டாம்;

விதிவிலக்குகள் உண்டு!) இந்த மாதிரி சூழலில் பெண் அதிகப்படியான எச்சரிக்கையோடு நடந்துகொள்ள வேண்டாமா? மணமான புதிதில் கல்பனா தனது அத்து மீறாத மாஜி காதலைப் பற்றிப்பேச, கணவன் தேனாக அவளைக் கொட்ட ஆரம்பித்தான். (இந்த மாதிரி விஷயங்களை மறைக்கணுமா? என்று கேட்டால் ஒரு வார்த்தையில் பதில் சொல்ல முடியாது).

● முதலிலேயே திருமணமான ஒருவரைக் காதலித்து இரண்டு குழந்தைகளைப் பெற்று, முதல் மனைவியின் மிரட்டல்களுக்கு ஆளாகி வாழ்க்கையைக் கோட்டை விட்டாள் வள்ளி.

● காதலனை நம்பி, அவனுடன் பலமுறை உறவாட, அவன் ஹெலனை உதறிவிட்டுப் பணக்காரப் பெண் ஒருத்தியை மணம் செய்துகொண்டான். கோபத்தில் பொங்கியவளுக்கு, 'என்கிட்டே வந்த நீ, இன்னும் எவ்வளவு பேர்கிட்டே போனியோ?' என்று சாட்டையடி கொடுக்க, ஹெலன் தற்கொலை முயற்சியில் இறங்கினாள்.

● காதலித்தவனை மணக்க முடியாமல் வேறு ஒருவனை மணக்க வேண்டிய கட்டாயத்தில் இருந்த ஜமீலா, மணமான பின்பு காதலனுக்கு அளித்த கடிதங்கள் புகைப்படங்கள் இவற்றுக்கெல்லாம் கப்பம் கட்ட வேண்டிய சூழ்நிலைக்கு உள்ளானாள்.

● தன் குறிக்கோள்களை நிறைவேற்றிக் கொள்ள ஆண்களை 'யூஸ் அண்ட் த்ரோ' விஷயமாக உபயோகப்படுத்திக் கொள்ளும் பெண்களால், தற்கொலை செய்து கொள்ளும் அளவுக்குப் பாதிக்கப்பட்ட ஆண்களும் உண்டு.

● மணமாகாத பெண்கள் கருத்தரிப்பது, மணம் செய்து கொள்ளாமல் சேர்ந்து வாழ்வது, HIV கிருமியைச் சம்பாதித்துக் கொள்வது இவையெல்லாம் அதிகரித்து வருவது நல்ல அறிகுறியே இல்லை.

சமுதாயத்தைச் சீர்திருத்த நான் இறங்கவில்லை. இளம் வயதில் உணர்வுகளால் அலைக்கழிக்கப்பட்டு வாழ்க்கையைக் கோட்டைவிடுபவர்கள் உறவுகளை சம்பாதிக்க மாட்டார்கள். நஷ்டக் கணக்குதான்.



''மேடைல ராகங்களோட பெயர்களைப் போர்டுல எழுதி வச்சுருக்காங்களே... எதுக்கு?''

''அதெல்லாம் அவருக்குத் தெரியாத ராகங்களாம்! பாடச் சொல்லிக் கட்டாயப்படுத்தக் கூடாதாம்!''

- என். உஷாதேவி

நான் காதலுக்கு எதிரி இல்லை! யாரோ சொன்னார்கள்: 'காதலிப்பது சைக்கிளில் போற மாதிரி; கல்யாணம் கப்பலில் போற மாதிரி. நடுக்கடலில் இறங்க முடியாது; சைக்கிளிலிருந்து இறங்கி விடலாம்'. உண்மை!

காதலில் தோல்வி ஏற்பட்டால் அதைத் தாங்கிக்கொள்ளும் மனபலம் வேண்டும். எந்தக் காதலும் கட்டாயம் நிறைவேறும் என்கிற எதிர்பார்ப்பு சரியில்லை. நாளை என்ன நடக்கும் என்று யார் சொல்ல முடியும்?

குடும்பங்களின் ஒப்புதல் இன்றி, காதல் திருமணம் செய்துகொண்டு வாழ்ந்து காட்டியவர்கள் வணக்கத்திற்கு உரியவர்கள். சொந்தங்களை வாழ வைத்தவர்கள். அவர்களை வாழ வைத்தது காதல் இல்லை; அவர்களது முயற்சிதான்.

அடுத்த வாரம் விலைமதிப்பில்லாத நட்பைப் பற்றிப் பேசலாமா?

(தொடரும்)

மாடலிங் :
**மோகன், விஜி, பேபி ஐஸ்வர்யா**
படம் : **ஸ்ரீஹரி**



தலைப்பாகையைத் தொட்டுவிடுகிற மாதிரி தாழ்ந்து, சமாளித்துக்கொண்டு தாவி, முத்துசாமி தீட்சிதரின் படத்தின் பின்னால் போய் ஒளிந்துகொண்டுவிட்டது. எத்தனை பாடகர்களின் கச்சேரிகளை இதே சாஸ்திரி ஹாலில் இந்த அணில் கேட்டிருக்கும்! தீட்சிதரின் படத்தின் பின்னால் அமர்ந்துகொண்டு அவரிடம் கொஞ்சம் கிருதிகள் கற்றுக்கொண்டு (ஆகா, அணில் 'ஹிரண்மயீம்

# சங்கீத சர்க்கரைக்கட்டி... சாஸ்திரிஹால் அணில்குட்டி!

**பா**டகி ஹம்சத்வனியில் 'வாதாபி கணபதிம்பஜே' ஆரம்பிப்பதற்கும் மேல் கூரையிலிருந்து சிறிய துவாரம் வழியாக அந்த அணில் ஒயரைப் பிடித்துக்கொண்டு, சர்க்கஸ் வித்தைக்காரர் போல் சர்ரென்று கீழே இறங்குவதற்கும் சரியாக இருந்தது.

'ஐயோ, அந்த இளம் பாடகி மேல் அது விழுந்துவிடாமல் இருக்க வேணுமே' என்ற கவலை பிடித்துக்கொண்டது. மாமியாரைக் கண்டு துளியும் அச்சப்படாத எத்தனை லட்சம் பெண்கள், கேவலம் கரப்பான் பூச்சியைக் கண்டு நடுநடுங்கியதாகப் பேட்டிகளில் சொல்லியிருக்கிறார்கள்! ஒரு கொழு கொழு அணிலே திடீரென்று பாடகி மேல் விழுந்து வைத்தால்...?

நல்லவேளை. அது லாகவமாய்த் துள்ளி மகாகனம் சீனிவாச சாஸ்திரியாரின் லக்ஷ்மீம் சதா பஜாமி' பாடினால் எப்படி இருக்கும்!) தியாகராஜரிடமிருந்து தாவி, சியாமா சாஸ்திரிகள் படத்தின் ஓரத்தில் வந்து எட்டிப் பார்த்தது. அணிலுக்கு என்ன தெரியும்? சீனிவாச சாஸ்திரியும் சியாமா சாஸ்திரியும் சகோதரர்கள் என்றுகூட நினைத்துக்கொண்டிருக்கும். முட்டாள் அணில்குட்டி!

பாடகி ஹிந்தோளத்தில் 'மா ரமணன்' பாடும்போது அணில் மறுபடி ஒரு சர்க்கஸ் வித்தை பண்ணி, மீண்டும் கூரை துவாரத்திற்குள் புகுந்துகொண்டுவிட்டது. அனுமதி இலவசம் என்பதால்தானே இப்படி எளிதாக அது நுழைந்து வந்துவிடுகிறது? கச்சேரிக்கு டிக்கட் உண்டு என்றால் அணில் இப்படி வர முடியுமா? வாலண்டியர்கள் வாலைப் பிடித்துத் திருகி வெளியே தூக்கிப்போட மாட்




டார்களா!

மூன்று நிமிடம்கூட ஆகவில்லை. பாடகி கல்யாணி ராக ஆலாபனை தொடங்கப் பத்து செகண்டுகள்தான் இருக்கும். மறுபடி சீனிவாச சாஸ்திரி படச் சட்டத்தின் விளிம்பில் ஒரு தாவு தாவியது அணில். இடப்புறம் மூன்று ஆசார்யர்களை ஓர் ஓரப் பார்வை பார்த்தது. மகா பெரியவர் கடைசியில் இருந்தார். சடாரென்று ஒரு தாவல். அவரிடம் ஆசியோ?... மறுபடி ஒரு சாட்டம் சாடி சீனிவாச சாஸ்திரியாரின் தலைப் பாகையைத் தொட்டுவிடப் பின்னால் ஒளிந்துகொண்டுவிட்டது. முட்டாள் அணிலாவது!

பாடகி 'ஆடின தெப்படியோ' தொடங்கியபோது, அணில்குட்டி எட்டிப் பார்த்தது. 'ஏ அணில்குட்டி, வயலின் கேட்கப் பிடிக்கவில்லையா...?' சர்ரென்று ஒயரைப் பிடித்துக்கொண்டு தலைகீழாக... ஐயோ... அது பாடகி மீது நிச்சயம் விழத்தான் போகிறது! அரண்டு மிரண்டு அவள் கத்தப் போகிறாள்...' அணில்குட்டியாவது கீழே விழுவதாவது! மறுபடி கூரை துவாரத்துக்குள் புகுந்துகொண்டு விட்டது.

ஒரு தடவையாவது விழக்கூடாதோ? பாடகி பயப்படட்டுமே, என்ன ஆகிவிடும்? தும்மிவிட்டால்? 'நிரவல் முடிந்து, சுவரம் பாடத் தொடங்கியதும் பாடகி இருமுறை தும்மியது, சுவர சுத்தமாக இருந்தது' என்று கரிமெலா சுப்பிரமணியம் 'தஹிந்து'வில் எழுதுவார். 'ஜலதோஷம் பிடித்திருக்கிறபோது ஏன் கச்சேரி பண்ண ஒப்புக்கொள்ள வேண்டும்? அதுவும் தியாகராஜர் கிருதி பாடும்போது தும்முவது அபசாரம்' என்று சாடுவார் எஸ்.வி.கே...

அணில்குட்டி இப்போது ரசிகர்களை மேலே இருந்து ஒரு பருந்துப் பார்வை பார்த்தது. அல்லது 'அம்மா'வின் பால்கனிப் பார்வை. எத்தனை பேர் தலையை ஆட்டி ரசிக்கிறார்கள். எத்தனை பேர் உம்மணா மூஞ்சியாக ரசிக்கிறார்கள்? இத்தனை நாளாகப் பாட்டுக் கச்சேரிகள் கேட்கிறோமே, நாமும் பாடினால் என்ன என்று

## சாருகேசி

ஐம்பது வருடம் முன்னால் மயிலாப்பூரில் கூரைக் கொட்டகை சபா ஒன்றில், ஒரு தேளே மிருதங்க வித்துவான் முதுகில் விழுந்ததாக எஸ்.ராஜம் சொல்லியிருக்கிறார்.

அது கிடக்கட்டும். அணில் பாடகி மீது விழட்டும் அல்லது விழாமலே போகட்டும். ஆனால் பாடும்போது தும்மல் வந்துவிட்டால் என்ன செய்வார்கள்? வாயைப் பொத்திக்கொண்டு நாசுக்காகத் தும்ம முடியுமா? மீறி,

அணில்குட்டிக்குத் தோன்றுமோ?

அணில்குட்டி தன் சாமர்த்தியத்தினால் சங்கீதம் கற்றுக் கொண்டு பாட சான்ஸ் கேட்டு வந்துவிட்டால்?

சபா செயலாளர்: உனக்கு ஆர்.டி.பி தெரியுமா?

அணில்: அப்படீன்னா?

சபா: ராகம், தானம், பல்லவி.

அணில்: எல்லாரும் பாடினால், நானும் கற்றுக்கொண்டு பாடுகிறேன்.

அணில்குட்டி சங்கீத கலாநிதி வேத வல்லியிடமோ, சங்கீத கலா ஆசார்ய செங் கல்பட்டு ரங்கனாதனிடமோ போய்க் கற்றுக் கொண்டு ஆர்.டி.பி பாடக்கூடும். அப்புறம் எல்லா சபாக்களிலும் அணில்குட்டியை அழைத்துப் பாடச் சொல்லுவார்கள்.

'நாதோபாசனா' 'சீனிவாசன் நிச்சயம் ஒரு சான்ஸ் கொடுப்பார். 'நாத இன்பத்'தில் பாட எஸ்.வி. கிருஷ்ணன் வாய்ப்புக் கொடுப்பார். "சபையோர்களே, இப்போது அணில்குட்டி பாடுகிறது. எல்லாப் பிராணிகளும் இந்த மாதிரி பாடினால், வித்வான்கள் பயந்துபோய் விடுவார்கள். அதனால் இப்போதைக்கு அணில்குட்டி மட்டும் பாடினால் போதும்!" என்பார்.

பார்த்தசாரதி சுவாமி சபாவில் அணில்குட்டிக்கு 'சங்கீத கலா சாரதி' விருது கொடுப்பார்கள். அணிலுக்கு எப்படிப் பொன்னாடை போர்த்துவது? சின்னக் கைக்குட்டை சைஸில் ஸ்பெஷலாகப் பொன்னாடை கொண்டுவந்து குனிந்து போர்த்துவார் போலும். ஆனால் அவருக்குத் தொப்பை மட்டும் இருக்கக் கூடாது.

சரி, அணில்குட்டிக்கு யார் பக்க வாத்தியம் வாசிப்பார்கள்? பெண்குட்டிகளுக்கே வாசிக்காத வித்துவான்கள் போயும் போயும் அணில்குட்டிக்கு வாசிப்பார்களோ? 'நான் அணில்குட்டிக்கு மிருதங்கம் வாசிக்கிறேன்' என்று உமையாள்புரம் சிவராமனும், வேலூர் ராமபத்திரனும் முன் வருவார்கள். வி.வி.எஸ், 'நானே வயலின் வாசிக்கிறேன்!' என்பார். ஆகா, கச்சேரி எப்படி இருக்கும்! பாரத் கலாசாரில் எல்லாருக்கும் 'யுவகலாபாரதி' கொடுப்பது மாதிரி, சாஸ்திரி ஹாலில் பாடுகிறவர்களுக்கு எல்லாம் சங்கீத சர்க்கரைக்கட்டி விருது கொடுப்பார்கள். அப்போது அணில் குட்டிக்கும் 'சாஸ்திரி ஹால் சங்கீத சர்க்கரைக்கட்டி' விருது கிடைக்கக்கூடும்.

முத்துத் தாண்டவரையும், கனம் கிருஷ்ணய்யரையும், கோபாலகிருஷ்ண பாரதியையும் கற்றுக்கொண்டு, அணில் குட்டி தமிழ்ப்பாடல்கள் பாடும். 'தமிழிசை வேந்தர் பட்டமும், 'இசைப் பேரறிஞர்' விருதும் அணிலுக்குக் கிடைக்கும். மருத்துவர் ராமதாசு, 'அணிலுக்கு இருக்கிற தமிழ் ஆர்வம்கூட நம் கலைஞர்களில் பலருக்கு இல்லை' என்று பேசுவார்.

அணில் மறுபடி சபையோரை ஒரு நோட்டம் விட்டது. பாடகி அபங் பாடும்போது ரசித்துக் கேட்ட மாதிரி மயங்கி நின்றது. அப்படி நின்றதில் எங்கே பொத்தென்று விழுந்து விடுமோ என்று பயமாகிவிட்டது. ஆனால் நல்ல காலம். விழவில்லை. தில்லானா முடிந்து மங்களம் பாடும்போது எல்லோரும் பலமாகக் கைதட்டினார்கள். அணிலும் கைதட்டியதோ என்னவோ!

"கச்சேரி பிரமாதம்!" என்றார் நண்பர்.

"அடுத்து அணிலைப் பாடச் சொல்ல வேண்டும்" என்றேன்.

நண்பர் என்னை வியப்புடன் பார்த்தார். ○



"சபாவுல கூட்டம் குறைவா இருக்குதே... ஏன்?"
"கேன்டீன்ல இன்னிக்கு என்ன 'மெனு'ங்கறத போர்டு எழுதி வைக்க மறந்துட்டாங்க!"
- அம்பைதேவா




# வித்யையும் விநயமும்...

வித்வான்கள் வித்தையை ஈச்வரோபாஸனையாக, அதாவது வேறு ப்ரதிப்ரயோஜனம் எதிர்பாராமல், பேணி வளர்த்துக்கொள்ள ப்ரயத்தனம் பட்டால் எப்படியாவது அவை உயிரைப் பிடித்துக்கொண்டு வ்ருத்தியாகிவிடும்; அவர்களும் உயிரைப் பிடித்துக்கொண்டு காலம் தள்ள ஈச்வரன் கைகாட்டாமல் போகமாட்டான்.

இப்படிப் பலர் இருந்துமிருக்கிறார்கள். பரமபக்தரான த்யாகையர்வாள் போன்றவர்கள்தான் ராஜ ஸம்பாவனை, பேர், புகழ் முதலியன வேண்டாம் என்று ஒதுக்கி, ஒதுங்கி அவர்கள் பாட்டுக்கு இருந்தார்களென்றில்லை. மஹா வித்வான் களிலுங்கூடப் பணவசதி, பாராட்டு, ப்ராபல்யம் வேண்டாம் என்றே இருந்தவர் களுண்டு.

வித்வானாக இருக்கிறவர் பணத்தைத் தள்ளுவதை விடப் பாராட்டைத் தள்ளுவது ச்ரமம். தனக்கு நல்லபுத்தி இருக்கிறது, நிறையத் தெரிந்து கொண்டிருக்கிறோம், ஆராய்ச்சி செய்து பெரிசாக எழுதியிருக்கிறோமென்றால் உடனே இதை லோகம் 'ரெகக்னைஸ்' செய்யவேண்டும், தம்மைப் புகழ வேண்டும், மரியாதை பண்ண வேண்டும் என்ற எண்ணங்களும் ஏற்பட்டுவிடுகின்றன. ஓரேயடியாக வித்யா கர்வம் ஏறி இந்த உலகத்துக்கு நம்மைப் புரிந்துகொள்ள சக்தி உண்டா, நம்மைப் பாராட்ட அதற்கு யோக்யதை உண்டா என்று நினைக்கிற அளவுக்கும் சில வித்வான்கள் போய் விடுகிறார்கள். ஆதலால் அவர்கள் வித்வத்துக்காகப் பாடுபடுகிறது போலவே, அல்லது அதை விடவும், அதோடுகூட விநய ஸம்பன்னர்களாவதற்கும் பாடுபட வேண்டும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

சர் சி.பி.ராமசாமி சாலை இல்லத்தில், நாம் 'பெல்'லை அழுத்தியதும், ''யார்?'' என்று கேட்டு, மெல்லக் கதவைத் திறக்கிறார் 'வயலின்' எம்.சந்திரசேகரன். அறிமுகப்படுத்திக்கொண்டு பேட்டியைத் துவங்குகிறோம்.

● **யார் உங்கள் குரு?**

என் அம்மா சாருபாலா மோகன் தான்.

● **நீங்கள் பிறந்து வளர்ந்தது எல்லாம்...**

கான்பூரில். என் தகப்பனார் ஜேகே கிளாத் மில்ஸில் வேலையாய் இருந்தார். பிறகு ஏழு வயதில் சென்னை வந்தேன்.

● **எப்போது வயலின் கற்றுக் கொள்ள ஆரம்பித்தீர்கள்?**

எனக்கு ஐந்து வயதாக இருந்த போது, என் அம்மா முதலில் என்னை இந்துஸ்தானி இசை கற்றுக்கொள்ளத் தான் அனுப்பி வைத்தாள். ஆனால், என் அம்மா வயலின் வாசிக்கும்போது வயலினைத் தொட்டுத் தடவிப் பார்ப்பேன். எனக்கு ஏழு வயது ஆனதும் அம்மாவே எனக்கு வயலின் வாசிக்கச் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தாள்.

● **கற்பது உங்களுக்குச் சிரமமாக இருந்ததா?**

அம்மாவே விரல்களை ஸ்வர ஸ்தானங்களில் வைத்து உதவுவாள். ஆனால் வில்தான் கீழே கீழே இறங்கிப் போய்விடும்; காரணம், என் குருவின் கைகளை என்னால் பார்க்க முடியாததுதான். ஆனால், என் அம்மா பொறுமையுடன் கூடவே இருந்து அதைத் திருத்தினாள். ஒருநாள் நான் சரியாக வாசித்தபோது, வில்லால் என் தொடையில் ஒரு தட்டுத் தட்டினாள். அப்போதுதான் நான் சரியான இடத்தில் வில்லை வைத்திருந்தேன் என்று தெரிந்தது!

● **முதல் கச்சேரி?**

1949-ல். என் பதினோராவது வயதில். சென்னை தியாகராஜ வித்வத் சமாஜத்தில். ஆனால் 1951 தான் என் அதிர்ஷ்ட வருடம். ஜி.என்.பிக்கு அந்த வருடம் வாசித்தேன். மியூசிக் அகடமியில் ஒரு வயலின் போட்டி. அதில் எனக்கு முதல் பரிசு கிடைத்தது. அதிலிருந்து எல்லா பெரிய இசைக் கலைஞர்களுக்கும் வாசிக்கத் தொடங்கினேன்.

● **விமர்சனங்களைப் படிக்கச் சொல்லிக் கேட்பதுண்டா?**

உம்... நன்றாக எழுதியிருந்தால் சந்தோஷப்படுவேன். நன்றாக எழுதவில்லையானால், ஏதானும் திருஷ்டி இருந்தால் போகட்டும் என்று எடுத்துக் கொண்டு விடுவேன்!

● **உங்கள் அறுபதாவது வயதில், உங்கள் சீடர்கள் உங்களுக்கு ஒரு விழா எடுத்தார்களே...**

ஆமாம். வெள்ளியால் வயலின் செய்து, தங்க முலாம் பூசி, பரிசாக வழங்கினார்கள். (அதை வைத்திருக்கும் அறைக்கு, நம் கையைப் பிடித்து அழைத்துச்சென்று, மூடியிருந்த

# ''இதயம் வழியாகவே பார்க்கிறேன்!''

## இந்த வருட 'சங்கீத கலாநிதி'

துணியை விலக்கிப் பார்க்கச் சொல்கிறார்.)

● **மகள் பாரதி உங்களுடன் சேர்ந்து வாசித்துக் கொண்டிருந்தாளே?**

அவள் இப்போது துபாயில் இருக்கிறாள். மகன் இருப்பது அமெரிக்காவில். (அவன் புல்லாங்குழல் வாசிப்பான்.)

● **'ஸோலோ' வாசிப்பது, பக்க வாத்தியமாக வாசிப்பது - எதில் திருப்தி?**

'ஸோலோ'வில் இஷ்டம்போல் வாசிக்கலாம். பக்க வாத்தியமாக வாசித்தால் 'சாலஞ்சிங்'காக இருக்கும்; விரும்பி வாசிப்பேன். இதுதான் எனக்குப் பிடிக்கும்.

● **மறக்க முடியாதவை என்று சில நிகழ்ச்சிகள் இருக்குமே?**

நிறைய. ஜனாதிபதி ராதாகிருஷ்ணன் முன்னிலையில் எம்.டி. ராமநாதனுக்கு வாசித்தது. பெங்களூர் இந்தியன் இன்ஸ்டிடியூட் ஆஃப் சயன்ஸில் வாசித்தபோது, சர் சி.வி.ராமனின் துணைவியார் லேடி ராமன் கேட்டு ரசித்துப் பாராட்டியது. நாதகர சக்ரவர்த்தி டி.என். ராஜரத்தினம் பிள்ளை, நான் வாசித்த கதன குதூகலத்தைக் கேட்டுவிட்டு, "இந்தக் கை இன்னும் எவ்வளவோ நிறைய வாசிக்கப்போகிறது!" என்று என் வலது கையைத் தொட்டுத் தடவிக் கொடுத்தது... சென்னையில் மகாலிங்கய்யர் என்ற ரசிகர் வீட்டில் வருடா வருடம் தியாகராஜ ஆராதனை நடத்துவார். அதில் துவாரம் வெங்கடசாமி நாயுடு வாசிப்பார். "நீயும் வாசிடா. உனக்குத்தான் அவரைத் தெரியுமே?" என்றார் மகாலிங்கய்யர். "உன்னுடன் நானும் வாசிக்கிறேன்!" என்றார் வெங்கடசாமி நாயுடு பெருந்தன்மையுடன். அவர் மகள் மங்கத்தாயாருவும் வாசித்தார். என் வாழ்நாளில் மறக்க முடியாத கச்சேரி.

● **நிதி உதவிக் கச்சேரிகள் செய்ததுண்டா?**

நிறைய. கனடா நாட்டு கண் பார்வை இழந்தோர் தேசிய சங்க நிதிக்காகவும், மலேசியாவில் உடல் ஊனமுற்றோர் மற்றும் ஊனமுற்ற குழந்தைகள் இல்ல நிதிக்காகவும் வாசித்தவை குறிப்பிடத்தக்கவை.

● **கச்சேரிக்கு முன்னால் 'பிளான்' செய்வீர்களா?**

அது ஐம்பது சதவிகிதம்தான். மீதி ஆடியன்ஸின் விருப்பத்தைக் கணித்துவிட்டு வாசிப்பேன்.

● **எப்படி?**

நான் எதையுமே என் இதயம் வழியாகப் பார்த்து விடுவேன்! எனக்குத் தெரிந்துவிடும்.



● எம்.சந்திரசேகரன்

- **சாருகேசி**
படம்: **யோகா**

# மயிலிறகு

முதல் முறையாக ஹிப்னாடிசத்தை நியூரோ - மருத்துவர்களும் ஆராய்ச்சியாளர்களும் ஒன்று சேர்ந்து மருத்துவ உலகுக்குள் வரவேற்றிருக்கிறார்கள். அதுவும் எப்படி? சிவப்புக் கம்பளம் விரித்து, கைகூப்பி, தலைகளைத் தாழ்த்தி, மிக்க மரியாதையோடு! இத்தனை காலமாக ஹிப்னாடிசத்தை சற்று ஒதுக்கியே வைத்திருந்த இவர்கள், இப்பொழுது கண்களை விரித்து ஆச்சரியப்படுகிறார்கள். 'ஹிப்னாடிசம் ஒரு விந்தையான விஷயம் மட்டுமல்ல; விஞ்ஞானபூர்வமான விஷயமும்கூட' என்று மூக்கில் கைவைக்கிறார்கள்.

ஹிப்னாடிசம் பற்றிய பல தவறான கற்பிதங்கள் உள்ளன. ஆவி, மாந்த்ரீகம் போன்ற அமானுஷ்ய வகையறாவைச் சார்ந்தது. கண் சிமிட்டுவதற்குள் தொப்பிக்குள் கையை விட்டு புறா எடுப்பதைப் போன்ற ஒரு வகை மாஜிக். படுக்கப் போட்டு, மிரட்டும் தொனியில் ஒருவரைக் கேள்வி கேட்டு நோண்டிக்கொண்டேயிருந்தால் அவரது மூளை தத்துபித்தென்று எல்லாவற்றையும் உளறிவிடும். இப்படி உளற வைப்பதுதான் ஹிப்னாடிசம்... இன்னபிற.

உண்மையில், ஹிப்னாடிசத்தில் அறிவியல் இருக்கிறது. 1950களிலிருந்தே இது ஒரு சிகிச்சை முறையாக இருந்து வருகிறது. ஒருவரது வலியை மறக்கவும் (உடல் காயம், காதல் தோல்வி), மன அழுத்தத்தைக் குறைக்கவும் ஹிப்னாடிசம் உதவி வருகிறது. அதாவது விழித்துக் கொண்டிருக்கும்போது அளிக்க இயலாத சிகிச்சைகளை ஆழ்நிலை உறக்க நிலைக்குக் கொண்டு சென்று அளிப்பார்கள். மன உளைச்சலால் தவிப்பவர்களை ஆழ்நிலை உறக்கத்திற்குள் அழுத்தி வைப்பதே அவரது உளைச்சலை விடுவிப்பது போன்றதுதான்.

ஒருவரை ஹிப்னாடிசம் செய்து தூங்க வைத்துவிட்டால் அவர் பார்ப்பதை, கேட்பதை, உணர்வதை, நம்புவதை அனைத்தையும் மாற்றியமைக்கலாம். வெறும் கையை நீட்டி, 'இந்தாங்க காபி, சர்க்கரை கரெக்டா இருக்கா பாருங்க?' என்று சொன்னால் ஹிப்னாஸிஸ் செய்யப்பட்ட நபர், உங்கள் கற்பனை காபியைக் கீழே சிந்தாமல் வாங்கி, பாம்பு போல 'உஸ், உஸ்' என்று ஊதுவார். பிறகு, ஒரு மிடறு குடித்துவிட்டு 'சர்க்கரை போதும்' அல்லது 'இன்னும் கொஞ்சூண்டு போடுங்க' என்று கேட்பார். நன்றாகயிருந்தால் இன்னுமொரு தம்ளர் கேட்பார்.

ஹிப்னாஸிஸ் நிலையில் இருப்பவருக்கு எப்பொழுதோ நடைபெற்ற சமாசாரங்கள் கூட, முந்தாநாள் நடந்தது போல், 'பளிச்' என்று துல்லியமாக நினைவுக்கு வரும். சாக்பீஸ் தூள் தொட்டுக் கொண்டு வெள்ளை பல்பம் சாப்பிட்டது. வெயிலில் காட்டாமல் காப்பிரைட்டிங் நோட்டில் மயிலிறகை ஒளித்து வைத்தது. முன் பெஞ்ச் சிறுமியின் ரிப்பனை வேண்டுமென்றே பிடித்து இழுத்தது. தும்பி வாலில் நூல் கட்டிப் பறக்கவிட்டது... இப்படி நிறைய... இடையே நிறுத்தி






# குட்டி போடுமா?

ஏதாவது கேள்வி கேட்டால் பதில் கூட வரும். ''ஏன் ரிப்பனை பிடிச்சு இழுத்தீங்க?'' ''ச்சும்மா'' ''மயில் குட்டி போட்டுச்சா?'' ''ஓ... ட்வின்ஸ் இரண்டுமே அம்மா ஜாடை.''

ஆழ்மன நிகழ்வுகள் பற்றியும், கனவுகள் பற்றியும் அறிவியல்பூர்வமாக ஆராய்ந்த முக்கிய மனோதத்துவ மருத்துவர் சிக்மண்ட் பிராய்ட். இவர் தமது நோயாளிகளைப் படுக்க வைத்து, ஆசுவாசப்படுத்தி, மெல்ல பேச்சு கொடுத்துக் கொண்டே (Free Analysis) சிகிச்சையைத் தொடங்குவார். 'நேத்து என்ன கனவு கண்டீங்க? உங்களுக்கு அடிக்கடி வர கனவு எது?' இப்படியெல்லாம் கேட்பார். அவர்கள் விவரிக்கும் கனவுகளைக் கவனமாகச் சேகரித்துக் கொள்வார். பிறகு நோயாளியை விடுவித்துவிட்டு அவரது கனவை படுக்கப் போட்டு ஆராய்வார். கனவுகளைப் பற்றிய இவரது முக்கிய புத்தகம் The Interpretation of Dreams. பல்லி விழுந்த பலன் போல் இருக்காது. வசீகரமான விவாதங்கள் அடங்கியிருக்கும். துப்பறியும் நாவலை விடவும் சுவாரசியமானது.

ஹிப்னாடிஸத்தையும் கனவுகளையும் பற்றி இன்னமும் நமக்கு முழுமையாகத் தெரியவில்லை. மதிய நேர டீவி பெட்டி, காதலியின் கடைக்கண் போன்றவற்றுக்கு ஹிப்னாடிஸ சக்தி இருப்பதாகப் பலர் சொல்கிறார்கள். ஆனால் பிராய்ட் இவற்றை ஏற்றுக்கொள்ளவில்லை.

- மருதன்

# ஞானியா? தேனியா?

**சா**மானிய மனிதர்கள் என்றால், வாழ்க்கையில் ஒவ்வொரு விஷயத்திலும் இதனால் என்ன பலன் என்று கணக்குப் போடுவார்கள். எதைச் செய்தாலும் ஒரு எதிர்பார்ப்பை வைத்துக்கொண்டு இருப்பார்கள்.

தத்துவஞானிகளும் இந்தச் சமுதாயத்தில் அங்கம்தான். ஆனாலும் சாமானியர்களிடமிருந்து எப்படி அவர்கள் மாறுபடுகிறார்கள்?

தங்களது செயல்கள் ஒவ்வொன்றையும் எதிர்பார்ப்பு எதுவும் இல்லாமல், செய்கிறார்கள். செய்யும் ஒவ்வொரு செயலிலும், இந்தச் சமுதாயத்தின் மீது தங்களுக்கு இருக்கும் அக்கறையை வெளிப்படுத்துகிறார்கள். தங்களுடைய வாழ்க்கைக்கான அர்த்தம் என்ன என்று உணர்ந்திருக்கிறார்கள். அவர்களது வாழ்க்கைப் பயணம், உண்மை என்ற வெளிச்சத்தை நோக்கி இருக்கிறது.





சாமானியர்களும்கூட தங்கள் வாழ்க்கைப் பயணத்தை உண்மையை நோக்கியதாக இருக்க முயற்சி செய்யலாம். அதை விடுத்துவிட்டு, ஆட்டுமந்தைக் கூட்டம் போல மனிதர்கள் நடந்து கொள்வது வேதனையளிக்கிற உண்மை.

திருமணத்தை எடுத்துக்கொள்ளுங்கள். நீண்ட பாரம்பரியம் கொண்ட ஆயிரம் காலத்துப் பயிர் அல்லவா, அதில் கடைபிடிக்கப்படும் ஒவ்வொரு விஷயத்துக்கும் ஆழமான அர்த்தம் உண்டு. ஆனால், இன்று பாரம்பரியம், சம்பிரதாயங்களைவிட செல்வாக்கைப் பெருமையுடன்

* படம்: ஸ்ரீஹரி

# 19 வெற்றி உங்கள் சாய்ஸ்!

வெளிப்படுத்தும் அரங்கமாகத் திருமணங்கள் ஆகிவிட்டன. திருமணம் செய்துகொள்ளும் இளையவயதினர், பரஸ்பரம் அன்புகாட்டி, நன்கு புரிந்துகொண்டு மன மகிழ்ச்சியுடன் வாழ வேண்டும் என்பதுதானே திருமணத்தினுடைய நோக்கம். அதற்கும் ஆடம்பரச் செலவு செய்து திருமணம் நடத்துவதற்கும் என்ன சம்பந்தம்?

முக்கியத்துவம் தரப்படவேண்டிய விஷயங்களுக்கு முக்கியத்துவம் தராமல், இதர



விஷயங்களில் கவனம்செலுத்துவதால்தான், சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுவதாகச் சொல்லப்படுகிற திருமணங்கள், விவாகரத்துக்காக கோர்ட்டுக்கு அதிக அளவில் வர ஆரம்பித்துவிட்டன.

இன்னும் ஒரு தமாஷ் சமீபகாலமாகப் பெரிய அளவில் பத்திரிகைகள் மூலமாக நடந்து கொண்டு இருக்கிறது. அதுதான் மரணடைந்தவர்களுக்கு நினைவு அஞ்சலி விளம்பரங்கள் வெளியிடுவது.

“ஒரு நல்ல ஆத்மாவை, மரணத்தின் கொடூரமான கரங்கள் பறித்துச் சென்றுவிட்டன'' என்று அனுதாப செய்தி அளிக்கிறார்கள். பிறப்பு, இறப்பு தத்துவத்தைப் பற்றிய ஞானம் இல்லாமல் உணர்ச்சி வசப்பட்டு அல்லது பிறரது கவனத்தை ஈர்ப்பதற்காகச் சொல்லப்படுவது.

இறந்தவர்களின் படத்தைப் போட்டு, 'பிரிவில் மனம் வாடும்' என்று பட்டியல் போடுகிறார்கள். ஏதோ, இவர்கள் இங்கே தருகிற செய்தித்தான் விளம்பரத்தை, மரணமடைந்தவர்கள் படித்து, சந்தோஷப்படப்

**சுனந்தாஜி**

போவது போன்ற இவர்களது செயல் பலரது கேலிக்குள்ளாவது தெரிவதில்லை.

பணவிரயம் என்பதைத் தவிர இந்தச் செயல்குறித்து வேறு என்ன சொல்ல?

இதுபோல இந்த உலகத்தில், நம் வாழ்க்கையில் எத்தனையோ விஷயங்களை ஆட்டு மந்தைபோல கண் மூடித்தனமாய் பின்பற்றிக்கொண்டு இருக்கிறோம். ஏன் இதைச் செய்ய வேண்டும்? இதை இப்படித்தான் செய்ய வேண்டுமா? என்று யாரும் கேள்வி கேட்டது கிடையாது. இதுதான் மனிதர்களின் பலவீனம்.

இன்னொரு உதாரணம். ஒருவருக்கு உடல் நலக்குறைவு. பரிசோதிக்கிற டாக்டர் ஆபரேஷன் செய்ய வேண்டும் என்று சொல்கிறார். ஒருமாதம் கழித்து ஆபரேஷனுக்குத் தேதி குறித்துக் கொடுக்கிறார். அத்துடன், டாக்டர் தன் வேலை முடிந்தது என்று அடுத்த நோயாளியைப் பார்க்கப் போய்விடுகிறார்.



"டி.வி. சீரியல் போடற நேரத்துல கச்சேரி நடந்தும் பெண்கள் கூட்டம் நிறையவாமே?"

"ஆமா... பாடகர் பாடியது முகாரி ராகமாச்சே!"

- என். உஷாதேவி

ஆனால், ஆபரேஷனுக்கு நாள் குறித்த நிமிடம் முதல் நோயாளி டென்ஷன் அடைகிறார். நமக்கு ஏதாவது ஆகிவிடுமோ என்று பயம் தொற்றிக்கொண்டு விடுகிறது.

நோயைவிட அவரது பயமே அவருக்கு வேண்டாத தொல்லைகளைக் கொடுக்கிறது.

ஆபரேஷன் நடப்பதற்கு முன்பு ஆஸ்பத்திரியின் வாயில் வரை ஆட்டோவிலோ, காரிலோ சாதாரணமாய் வந்து இறங்குகிறவர்கள்கூட ஆஸ்பத்திரிக்குள் நுழைந்தவுடன், வீல்சேர் கேட்கிறார்கள். ஏன்? நமக்கு ஏதாவது ஆகிவிடுமோ என்கிற பயம்தான்!

உடம்புக்கு ஏதாவது ஒன்று என்றால், அதனால் வரும் கஷ்டங்களை உடல்ரீதியாக அனுபவிப்பதுடன் இல்லாமல் மனோரீதியாகவும் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. இதை நாமே உருவாக்கிக் கொள்கிறோம்.

பல டாக்டர்கள், "உங்கள் உடம்புக்கு ஒன்றுமில்லை. யூ ஆர் பர்ஃபெக்ட்லி ஆல் ரைட்! கவலைப்பட வேண்டாம்!" என்று சொல்கிறபோதே பலர் பாதி நோய் குணமாகிவிட்டதாக நினைக்கிறார்கள்.

நோயாளிகளுக்கு மட்டுமில்லை; டாக்டர்களுக்கும்கூட பொறுமை மிகவும் அவசியம். மெத்தப் படித்த டாக்டர்கள், அடுத்தடுத்து நோயாளிகளைப் பார்த்துக்கொண்டே இருக்க வேண்டும். ஒரே நோயாளியிடம் அதிக நேரம் பேசி, நேரத்தை வீணாக்கிக் கொண்டிருக்கக் கூடாது என்று நினைக்கிறார்கள். ஓரளவு படித்தவர்கள், கொஞ்சம் பொறுமையுடன் நோயாளிகளைக் கையாள்கிறார்கள். நிதானமாகப் பேசி, நோயாளிகள் சொல்லும் எல்லாவற்றையும் பொறுமையோடு கேட்டுக் கொள்கிற டாக்டர்கள் நோயாளிகளின் அபிமானம் பெற்றவர்களாய் இருக்கிறார்கள்.

சரி! விஷயத்துக்கு வருகிறேன். உடம்பு சரியில்லையா? உடம்பு அதற்கான வலியை அனுபவிக்கட்டும். அதற்காக ஏன் மனத்தை வருத்திக் கொள்கிறீர்கள்?

உடலை ஒரு இடத்திலேயே இருத்தி வைத்துவிட முடியும். ஆனால் மனத்தைச் சிறைப்படுத்த முடியுமா? பல்வேறு வகையான குற்றங்களுக்காகவும் கைது செய்யப்படுபவர்கள், குற்றங்கள் நிரூபிக்கப்பட்டால், சிறைத் தண்டனை பெறுகிறார்கள்!

சிறைத் தண்டனையை அனுபவிப்பது எது? உடலா? மனமா?

நிச்சயம் உடல்தானே! உயரமான சிறைவளாகத்தின் உள்ளே குற்றவாளிகளின் உடல்தானே சிறை வைக்கப்படுகிறது. ஆனால் அவரது மனம், உலகின் எந்த ஒரு மூலைக்கும், அவ்வளவு மட்டும்தானா என்ன? இந்தப் பிரபஞ்சம் மற்றும் அதற்கு அப்பால் இருக்கும் இடங்களுக்கும் செல்லும் சக்தி படைத்தது ஆயிற்றே!

பசி எடுக்கிறது. சாப்பிட உட்கார்கிறீர்கள். அப்போது, திடீரென்று ஒரு சோகமான செய்தி வருகிறது. அதனால் உங்கள் மனம் பதற்றம் அடைகிறது. சாப்பிட முடியவில்லை. உங்கள் மனம் அதையே நினைத்துக்கொண்டிருக்கிறது.

மற்றவர்கள், ''சாப்பிடாமல் எழுந்துவிட்டீர்களே! ஒருவாய் சாப்பிடுங்கள்'' என்று சொன்னாலும், உங்கள் மனம் சாப்பிட ஒப்பவில்லை. காரணம், உங்கள் உடலைவிட உங்கள் மனத்தின் கை ஓங்கி இருப்பதுதான்.

இதுபோல, புறச் சூழல்கள் காரணமாக நம் மனம் நம் உடலைக் கட்டுப்படுத்துவது சாத்தியம் என்றால், மனிதன் தன் மனத்தையே கட்டுப்படுத்துவதும் சாத்தியம்தானே!

மலர்கள் எத்தனை வசீகரமானவை. பெண்களுக்குப் பூ என்றால் எவ்வளவு பிரியம்! இந்த நாகரிகமான உலகிலும் பெண்கள் மத்தியில் பூவுக்கு மவுசு குறையவில்லை! அலுவலகங்களிலும் பலரது வீடுகளிலும் தினமும் மலர் அலங்காரம் செய்து வைப்பது மனத்துக்கு இதமான ஒரு சூழ்நிலை ஏற்படுத்துவதற்காகத்தான்!

வண்ண வண்ணப் பூக்களைப் பார்க்கிறபோது, உடனடியாக மனத்துக்குள்ளே ஒரு சந்தோஷம் புகுந்துகொள்வதை நீங்கள் உணர்ந்திருக்கிறீர்களா? அவை ஏற்படுத்துகிற உற்சாகத்தை அனுபவித்திருக்கிறீர்களா? அதைப் பார்ப்பதன் மூலம் கிடைக்கிற சந்தோஷம்; உற்சாகம்.

பூக்களின் அருகில் செல்லுங்கள். இதமான வாசனையைக் கண்மூடி அனுபவியுங்கள்! அந்த சந்தோஷத்தை, உற்சாகத்தை அனுபவித்துப் பாருங்கள்!

கண்களால் பார்க்கிற, மூக்கால் நுகர்கிற மனிதனை விட அதிக அளவில் பூவை முழுமையாக அனுபவிப்பது எது?

தேனீ!

ஆம்! தேனீக்கள் ஒவ்வொரு பூவாகத் தேடிச்சென்று, தேனைச் சேகரிக்கின்றன. துளித் துளியாய், பல மைல் தூரம் பறந்து சென்று சேகரித்து வைப்பது, தங்களுக்காக அல்ல; மற்றவர்களுக்குப் பயன்படுமே என்றுதான்!

நாம் ஒவ்வொருவருமே ஞானி போல ஆகாவிட்டாலும் தேனீ போலவாவது ஆக வேண்டும்! எப்படி?

(வெற்றி தொடரும்)





# ஆசையா அள்ளுறாங்க!

மழை வேறு இப்போதைக்கு 'நிற்க மாட்டேன் போ' என்று அடம் பிடிக்கிறது. கிரிக்கெட் போட்டியும் ரத்து! எத்தனை நேரம்தான் ஐந்து நட்சத்திர விடுதியில் சோம்பல் முறித்துக் கொண்டிருப்பது. 'கைஸ், கமான் லெட்ஸ் கோ' என்று கேப்டன் ஸ்மித்திடமிருந்து கட்டளை பிறக்கிறது. 'அப்பாடா' என்று டி-ஷர்ட், ஜீன்ஸ் அணிந்து உற்சாகமாக ஷாப்பிங்குக்கு கிளம்புகிறார்கள் தென் ஆப்பிரிக்க கிரிக்கெட் அணி வீரர்கள். மழை பொழிந்த மாலைப் பொழுதில் அவர்கள் மனமுவந்து ஷாப்பிங் சென்ற இடம் - சென்னையின் இசை நூலகமான மியூசிக் வேர்ல்டு.

கோயங்காவின் ஆர்.பி.ஜி குழுமத்தைச் சேர்ந்த 'மியூசிக் வேர்ல்டு'க்கு இந்தியா முழுக்க இருநூறு கிளைகள். அதிக கஸ்டமர்கள், அதிக லாபம் சென்னையில்தான். மியூசிக் வேர்ல்டுக்குள் சென்றால், அடையாளங்கள் சிறிது மாறியிருக்கின்றன. இது பற்றி நம்மிடம் பேசினார் இணை மேலாளர் சுதா:

• ஷாப்பிங் செய்கிறார் பொல்லாக்

"தரமான ஆடியோ கேஸட், சி.டிகள் வாங்குவதற்காக மட்டுமல்லாமல் உலக இசையில் என்னென்ன புதுவரவுகள் என்பதை அறிந்து கொள்ளவும் தினமும் ஆயிரக்கணக்கில் வாடிக்கையாளர்கள் மியூசிக் வேர்ல்டில் கூடுகிறார்கள். டிசம்பர் சீஸனில் இது இரட்டிப்பாகும். இப்பொழுது நாங்கள் புண்டாய் நிறுவனத்தின் டீவி செட்டுகளை கடை முழுக்க பரவலாகப் பொருத்தியுள்ளோம். வீடியோ பார்த்து சி.டிகளைத் தேர்வு செய்பவர்களுக்கு வசதியாக இருக்கும். தரமான சி.டிகளை வாங்கியவர்கள் அவை, பழுதாகிவிட்டால் கவலைப்பட வேண்டாம். இலவசமாக ரிப்பேர் செய்து தரும் வசதியை ஏற்படுத்தியுள்ளோம். நூற்றுக்கணக்கான பாடல்களை கம்ப்யூட்டரிலிருந்து டவுன்லோடு செய்து அப்படியே கேட்கும் வசதியுள்ள I - pod (விலை ரூ.7000 முதல்) மற்றும் world space radio போன்றவற்றையும் விற்பனைக்கு அறிமுகப்படுத்தியுள்ளோம். சில தென் ஆப்பிரிக்க வீரர்கள் ஆடியோ சி.டிகளை வாங்கினாலும் அவர்கள் மொத்தமாக அள்ளியது புது டி.வி.டிகளைத்தான்'' என்றார். "மியூசிக் வேர்ல்டில் சமீபத்தில் அதிகமாக விற்பனையான ஆடியோ சி.டி எது?'' என்று கேட்டோம். மின்னல் வேகத்தில் வந்தது பதில்:

"கஜினி!"

• சநகன்





* கூடி வாழ்ந்தால் 99,99,999+1 நன்மை!
* தை பிறந்தால் மார்கழி முடிஞ்சுருக்கும்...!
* ஐந்தில் வளையாதது நான்கில் வளையாது...!

- நாமக்கல் பாலு

* செல் பிடித்த கையும், சொறி பிடித்த கையும் சும்மா இருக்காது!

- பி. பாலாஜி கணேஷ், கோவிலாம்பூண்டி

* சோகம் இல்லாமல் சீரியல் உண்டா?

- பாரதிமகள், கரூர்

* பார்க்கப் பார்க்க 'எஃப்' டி.வியும் போரடிக்கும்!

- என்.பாலகிருஷ்ணன், மதுரை



* அடை மழை முன்னே; அரசாங்க உதவி பின்னே!

- இரா. கல்யாண சுந்தரம், மதுரை

* ஏழு தலைமுறைக்கும் உட்கார்ந்து சாப்பிட சொத்து இருந்தாலும் ஃபாஸ்ட் ஃபுட் கடையில் நின்னுக்கிட்டுத்தான் சாப்பிடணும்!

# இளமொழி 16

## (வாசகர்கள் ஜமாய்க்கிறாங்க!)

* ஓடத்தெரியாதவனுக்கு பைனான்ஸ் கம்பெனி எதற்கு?
* செல்லற்ற வாழ்வே பில்லற்ற செல்வம்.

- வீ.விஷ்ணுகுமார், கிருஷ்ணகிரி

* வீட்டுக்கு வீடு வாஸ்துப்படி!

- கருணை வண்ணன், சென்னை

* பந்திக்கு முந்து; மொய் எழுதப் பிந்து.

- விஜயா ரவி, ஈரோடு

* வல்லவனுக்குப் புல் அறுக்கும் வேலையா?

* சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் வங்கிக் கடனே!
* அகத்தின் நோய் ஸ்கேனில் தெரியும்.

- ஞா.ஞானமுத்து, புதுக்கோட்டை

* சிறு குறும்பும் பல் மேல் குத்து வாங்க உதவும்.
* டி.வி சீரியல் நடித்து வந்த காசு அழாது.

- கே.ஆனந்தன், தர்மபுரி



கலைஞர் ஒரு பக்கம்... அம்மா ஒரு பக்கம்னு எல்லா 'தலை'ங்களும் ஆளுக்கொரு பக்கமா போயி வெள்ள சேதத்தைப் பார்வையிட்டு சென்டிமெண்டு மழையைப் பொழிஞ்சுட்டு வந்திருக்காங்கப்பு... அவங்கள்லாம் 'தலை'யைக் காட்டிட்டு போன பிறகு நாம போகலன்னா நம்ம இமேஜ் என்னாகும்னு பயந்துகிட்டே சென்னை பூரா ஒரு ரவுண்டு அடிச்சுட்டு வந்தேன். அப்பப்பா ரொம்பதான் சேதாரமாயிருக்கு..!

அதுலயும் நம்ம கோட்டூர்புரந்தான் காப்பாத்திக் கொண்டு வர்றதுக்குள்ள அதிகாரிகளுக்கும், அலுவலர்களுக்கும் தாவு தீர்ந்துடுச்சாம்... நம்ம மினிஸ்டரு ஜெயக்குமாரு 'ஷார்ட்ஸ் - டிஷர்ட்'னு காலேஜ் பையன் கணக்கா வந்து, 'டமால் டுமீல்'னு நீச்சல்லாம் அடிச்சு, ஜனங்களைக் காப்பாத்தி அவங்களுக்கு உணவு பொட்டலத்தையெல்லாம் கொடுத்தாருப்பு...

அமைச்சரே அரை



# கான்ட்ராக்ட்டுக்கு அடி போட்ட கட்சிக்காரர்கள்!

ரொம்பவே பாதிக்கப்பட்டிருக்கப்பு... மழையில வீட்ல இருந்த பொருள்களோட வீடும் சேர்ந்து அடிச்சிக்கிட்டு போனதால ஏகப்பட்ட பேரு ரொம்பவே தவிச்சுப்போயிட்டாங்க. உடனே அப்போதைக்கு வேறவழியில்லாம அவங்களை எல்லாம் கொண்டாந்து நம்ம காந்தி மண்டபத்துல 'நிவாரண மையம்' கணக்கா தங்க வச்சிட்டாங்கப்பு...

ஆனா அங்க ஜனங்களை எல்லாம் டவுசரோட ஃபீல்டுல குதிச்ச பிறகு ஐ.ஏ.எஸ். என்ன... ஐபி.எஸ் என்ன... நம்ம தென் சென்னை ஜாய்ன்ட் கமிஷனர் சைலேந்திரபாபுவும் கட் பனியன் ஷார்ட்ஸ் போட்டுக்கிட்டு மீட்புப் பணியில இறங்கிட்டாரு. அமைச்சர்ல ஜெயக்குமாருக்கும், ஆபீசர்ஸ்ல சைலேந்திரபாபுவுக்கும் செம ஒர்க்கு... அதனால செம பேரும்

கிடைச்சிருக்கு.

நிவாரணத்தொகை வாங்கிக் கொடுக்கறதுல ஒரு போட்டா போட்டியே நடந்திருக்கப்பு... அதுலயும் நம்ம எம்.எல்.ஏங்க தன்னோட தொகுதியில இருக்குற பாதிக்கப்பட்ட - பாதிக்கப்படாத எல்லாருக்கும் மானாவாரியா வாங்கிக்







கொடுத்திருக்காங்கப்பு... அதுலயும் நம்ம மயிலாப்பூர், மந்தவெளி, திருவான்மியூர் மாதிரி ஏரியாக்கள்ல ஏகப்பட்ட மாடி வீட்டு ஆளுங்க லுங்கியைக் கட்டிக்கிட்டு ரேஷன் கார்டோட வந்து அமௌண்டை அள்ளிக்கிட்டு போயிருக்காங்க... இது அங்க நின்னுக்கிட்டு இருந்த கட்சிகாரங்களுக்கும் தெரியாமயா இருக்கும். இருந்தாலும் இப்ப கண்டுக்காம இருந்தாதான் பின்னால் எலக்ஷன் வர்றப்போ நம்மள கண்டுப்பாங்கன்னு ஐடியா பண்ணி அடக்கி வாசிச்சிருக்காங்கப்பு...

நம்ம அம்மா வேற மத்திய அரசு கிட்ட 13,685 கோடி ரூபாய் வேணும்னு லெட்டர் போட்டிருக்காங்க... ஆனா டெல்லியோ, லெட்டர்ல கேட்டா தந்துட முடியாதுன்னு சொல்லிட்டாங்க. அதனால இப்போ சேத விவரத்தை 'ஒரு திட்டம்' கணக்கா அனுப்பப்போறாங்களாம்.

அதெல்லாம் இருக்கட்டுமப்பு... இப்போ இன்னொரு மேட்டரு ஒண்ணு கட்சிக்காரங்க மத்தியில ஓடிக்கிட்டு இருக்கு. அது இந்த டேமேச் மழையால சேதமான சாலைகளைத் திரும்ப சீர் பண்றதுக்கு சீக்கிரமே கான்ட்ராக்ட் - டெண்டர்னு நடக்கப் போகுது... அதுல யார் யாருல்லாம் ஒழுங்கா நிவாரணப் பணி செய்தாங்களோ அவங்களுக்குக்கெல்லாம் கான்ட்ராக்ட் கிடைக்க சான்ஸ் இருக்குதாம். அதனால அதை எப்படி லபக்குற துங்கறதுதான் இப்போ ஹாட் வார்.



**–ஒற்றன்**

# நீங்கள் கேட்டவை



● போர் போர்!

● ஆர்.நாகராஜன், சென்னை - 117.

? "தமிழர்களும் இந்தியர்கள்தான் என்பதை மத்திய அரசு உணர்ந்து உதவ வேண்டும்" என்கிறாரே ஜெயலலிதா?

! இப்படிப் பிரித்துப் பேசுவது முதல்வருக்கு அழகல்ல. வெள்ளச் சேதத்தை உணர்ந்து மத்திய அரசு உதவ வேண்டும் என்று வலியுறுத்துவதே நல்லது. முதல்வரின் பிரித்துப் பேசும் போக்கு, "அதிமுக அல்லாதாரும் தமிழர்கள்தான் என்று உணர்ந்து நிவாரணப் பணிகள் நடக்க வேண்டும்" என்ற ஆர்ப்பாட்டம் வலுவடையவே உதவும்.

● ஆர். ராஜதுரை, சீர்காழி.

? டிசம்பர் 12 ரஜினி பிறந்தநாளையொட்டி தபால் நிலையங்களில் ரூ 10 செலவில் ஈபோஸ்ட் அனுப்பும் வசதி செய்யப்பட்டுள்ளதே?

! 1) சம்பிரதாய தந்திகள் அனுப்பும்போது தபால் நிலையங்களில் வேலைச் சுமை அதிகரிக்கும். இ.போஸ்டால் அது பெருமளவு தவிர்க்கப்படும். 2) அரசுக்கு வருவாய் கூடும். 3) ரசிகர்களுக்கும் வசதி. தபால்துறை இம்மாதிரி நூதன உத்திகளைக் கையாண்டு நஷ்டத்தைக் குறைப்பது வரவேற்கத்தக்கதே.



● ... போக்கும்



● நோக்கும்...

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

? உமாபாரதி Vs பா.ஜ.க...?

! அச்சோ! கேள்வியைப் பார்த்தா அடிச்சுடுவாங்க! உமாபாரதி இஸ் பா.ஜ.க என்றல்லவா சொல்லிக்கிட்டிருக்காங்க.

● கே. தெய்வசிகாமணி, சென்னை - 5.

? ஆந்திராவுக்கு வரவேண்டிய திட்டங்களைத் தமிழ்நாட்டுக்குத் தள்ளிக்கொண்டு போய் விடுகிறார் தயாநிதி மாறன் என ஆந்திர முதல்வர் புகார் செய்வது குறித்து...?

! ஆந்திர முதல்வர் தோழமை கட்சிக்காரர்தான். அவரே இப்படி ஆதங்கப்பட்டால்...! இத்தகைய எண்ணங்கள் வலுவடையாதபடி மத்தியில் உள்ள தமிழ் அமைச்சர்கள் நடந்து கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். மத்திய அரசு எல்லா மாநிலங்களுக்கும் பொது. எல்லா முதலமைச்சர்களுடனும் மத்திய அமைச்சர்களுக்குச் சுமுகமான நல்லுறவு இருக்க வேண்டும்.

● எஸ். சரஸ்வதி, வேலப்பாடி.

? கருணாநிதியையும் ஜெயலலிதாவையும் விமர்சிப்பது மட்டுமே அரசியல் ஆகிவிடாது" என்கிறாரே விஜயகாந்த், சரிதானா தராசு?

! ரொம்ப சரி. எது அரசியல் அல்ல என்பது எல்லோருக்கும் தெரிந்திருக்கிறது. எது அரசியல் என்பதுதான் இப்போது ஒருத்தருக்கும் புரியவில்லை.

● லெ.நா. சிவகுமார், சென்னை - 33.

? "நான் ஒரு பிறவிப் போராளி. அநீதிகளையும் அக்கிரமங்களையும்

எதிர்த்துப் போராடு வதில் எனக்குக் கிடைக்கிற மகிழ்ச்சி வேறெதிலும் கிடைப் பதில்லை'' என் கிறாரே வைகோ

! அநீதிகளுக்கு எதிராகப் போராடுவதும் எதிர்ப்பதும் அவசியமே என்றாலும் அது மட்டுமே போதாது. ஒரு சிறந்த அரசியல்வாதி, தீர்வுகளை நாடி அவற்றுக்காக உழைக்க வேண்டும். தீர்வுகள் பிறப்பதற்கான தூண்டுகோலாக, காரணமாக, கிரியா ஊக்கியாக இருக்க வேண்டும். அதைத்தான் இங்கே யாரும் செய்வதில்லை.

● என். கோமதி,
நெல்லை - 7 ❑



• அலம்பல் புலம்பல்!

# அடை மழையால் நஷ்டம் அரசுக்கா?

? அடைமழையால் நஷ்டம் அரசுக்கா பொதுமக்களுக்கா?

! அரசின் நிவாரணப் பணிகளுக்குச் செலவாகும் கோடானு கோடிகளை வரிகள் மூலம் மக்கள்தான் ஈடு செய்யப் போகிறார்கள். ஆக, மக்களுக்குத்தான நஷ்டம். இந்த நிவாரண உதவிகளைத் தனி நபர்களுக்கு வழங்கும்போது பணம் விரயம் ஆகும். பண வீக்கம் அதிகரித்து விலைவாசி உயரும். மாறாக, நிவாரணத்தை நிரந்தர மராமத்துப் பணிகளாக மாற்றி அமைத்தால் வேலை வாய்ப்பு பெருகும். நாளடைவில் மக்களுக்குப் பெரிய லாபமாக விளங்கும். ஆனால் ஆட்சியாளர்களுக்கு வோட்டிலே தான் கண்.

● ஹனு இலட்சுமி,
இருமருகல் ★

? சமீபத்தில் வந்த தமிழ்த்



• வருவாய், வருவாய்!

• பிரித்து பிரித்து...!



• 'நானே நானே!'

**திரைப்படங்களில் சமுதாய நோக்கு அதிகம் காணப்படும் படம் எது...?**

! சேரனின் தவமாய் தவமிருந்து; தங்கர்பச்சானின் சிதம்பரத்தில் ஓர் அப்பாசாமி.

● **குவளை எழில், சென்னை - 92.**

*? ஒழுக்கம் தவறும் ஆசிரியர்களை நேரடியாக டிஸ்மிஸ் செய்ய அரசு முடிவு எடுத்திருப்பது சரியான நடவடிக்கையா?*

! பழி வாங்கும் படலமாகிவிடும் பெரும் அபாயம் இருக்கிறது. தற்காலிக பணி நீக்கம் செய்து விசாரணை நடத்த இப்போதே விதிகளில் இடமுண்டு.

● **பூரி ஜகன்னாதன், சென்னை - 93.**

*? ஆந்திர அரசு மருத்துவமனைகளில் டாக்டர்கள் பகலில் பணியாற்றிவிட்டு, இரவில் அதே இடத்தை சொந்த கிளினிக்காகவும் பயன்படுத்திக் கொள்ளலாம் என்ற ஆந்திர முதல்வரின் கருத்து சரியா?*

! ரொம்பத் தப்பு; அபத்தமும்கூட - அரசு செலவில் டாக்டர்கள் தனியே சம்பாதித்துக் கொள்ள அமைச்சரே வழி செய்து தருவதா!

அவர்களுக்குத் தெரியும் அரசியல் சுதந்திரம் பெற்ற பிறகும் மக்கள் வேறு பல சுதந்திரங்களை இழந்து தவிப்பார்கள் என்று. அந்நிய முதலீடு என்ற கொள்கை மூலம் பொருளாதார அடிமைத்தனத்துக்கு வேறு வித்திட்டு வருகிறோம். எனவே, எதற்கும் இருக்கட்டும் என்று இருவிதமாகவும் பாடி வைத்திருக்கிறார் பாருங்கள்.

● **கு. அருணாசலம், தென்காசி.**

*? "என்னை பேனா முனையால் குத்துகின்றனர். நான் எங்கே போய் முறையிடுவேன்? எனக்கென்று பத்திரிகையோ டி.வியோ இல்லை. நான் நிராயுதபாணி" என்ற டாக்டர் ராமதாஸின் புலம்பல்...?*

! நேர்மை என்ற கேடயம் இருந்தால் பேனா முனைக்குப் பயப்படத் தேவையில்லை. கடந்த கால சம்பவங்களைப் பார்க்கிறபோது, 'நிராயுதபாணி' என்றால் நம்பத் தோன்றவில்லை. மக்கள் தொலைக்காட்சி என்ற பெயரில் பா.ம.க தரப்பு தொலைக்காட்சி வரவிருப்பதாகவும் தகவல்!

● **மஞ்சுதேவன், மும்பை - 8.**

*? அமிதாப் பச்சன்?!*

**☐ ரூ. 100/- பரிசு பெறுபவர்:**

**என். கோமதி,**
**200, பெருமாள்புரம்,**
**திருநெல்வேலி -**
**627 007**

**★ ரூ. 50/- பரிசு பெறுபவர்:**

**ஹனு இலட்சுமி,**
**கணினி இயக்குநர்,**
**பஞ்சாயத் யூனியன்,**
**திருமருகல் - 609 702**

! பாலி - கோலிவுட் நட்சத்திரங்களுக்கு ஒரு முன்னுதாரணம் - புகை - மது கிடையாது. சுத்த சைவம். தேவையற்ற விவாதங்களில் சிக்கிக் கொள்வதில்லை. அவர் உடல் நலம்பெற அவரது சென்னை ரசிகர்கள் சிவா - விஷ்ணு கோயிலில் யாகம் செய்து வருகிறார்கள். அமிதாப் சென்னை வந்தால் தவறாமல் சென்று வணங்கும் கோயில் இது.

● **ஆர். எப்சிபா, சென்னை - 12**

*? 'என்று தணியும் இந்த சுதந்திர தாகம்' என்று பாடிய அதே பாரதியார், சுதந்திரம் அடைவதற்கு முன்பே 'ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம்' என்று எப்படிப் பாடினார்?*

! மகாகவிகள் எப்போதுமே தீர்க்க தரிசிகள்.

* பிரார்த்திக்கும் சென்னை

# அஷ்ட ஸ்வரங்கள்!

டி.வியில நீங்க எந்த சேனலைத் திருப்பினாலும் சரி... இவரோட குரலோ... இல்ல முகமோ வந்துகிட்டே இருக்கும்... அவர் வேற யாருமில்லீங்க... சன் டி.வி 'சப்த ஸ்வரங்கள்' நிகழ்ச்சியை நடத்தற ரங்கநாதன் தான். இவருக்கு ஒரு முகம் இல்லையாம்... எட்டு முகங்களாம்.

**பாடகர்:**

எங்க குடும்பம் கடந்த 50 வருஷமா இசைத்துறையில் இருக்கறதால எனக்கு கர்நாடக சங்கீதம் மேல ஒருவித காதல் உண்டு. பாலக்காடு கே.வி.நாராயணசாமிதான் என்னோட குருநாதர். இதுவரைக்கும் முப்பதுக்கும் மேல ஆடியோ கேசட்டுகள்ல என் பாடல்கள் நிரம்பியிருக்கு... 'தகதிமிதா' படத்துல ஒரு பாடல் பாடியிருக்கேன்.

**இசையமைப்பாளர்:**

என்னோட பாடல்களுக்கு நானே இசை அமைக்கறதுண்டு. அதுதவிர நிறைய விளம்பரப் படங்களுக்கு நான் மியூஸிக் கம்போஸ் பண்ணிட்டு இருக்கேன்.

**டப்பிங் ஆர்டிஸ்ட்:**

ப்ரூ, போத்தீஸ், ஆச்சி மசாலா, சென்னை சில்க்ஸ், ஆர்.எம்.கே.வி என ஏகப்பட்ட விளம்பரங்களுக்கு நான் தான் வாய்ஸ் கொடுத்துட்டு இருக்கேன். 'ராஜஸ்தான்' படத்துல கூட டப்பிங் பேசியிருக்கேன். நான் இப்போ தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், இந்தி, ஆங்கில மொழிகள்ல டப்பிங் பண்ணிட்டு இருக்கேன்.

**செய்தி வாசிப்பாளர்:**

டி.வி ஃபீல்டுக்குள்ள எப்படியும் நுழைஞ்சுடணும்னு ஒரு ஆசை. அதுக்கு ஒரு நல்ல பாதை அமைத்துக் கொடுத்தது இந்த நியூஸ் ரீடிங் வாய்ப்பு. அதுக்கு என்னோட ஐந்து வருட எப்.எம் அனுபவம் ரொம்ப பயனுள்ளதா இருந்தது.

**மாடல்:**

கடந்த ரெண்டு வருஷமா மாடலா நடிச்சிட்டு இருக்கேன். ஹீரோ ஹோண்டா ஸ்ப்ளெண்டர் ப்ளஸ், த்ரிஷ்லா ப்ளானட் விளம்பரங்கள்ல நான் மாடலா வர்றேன்.

**நடிகர்:**

'நளதமயந்தி' படத்துல 'மலையாளம் தெரிந்த நியூஸ் ரீடர்' கேரக்டர்ல நடிக்க ஒரு வாய்ப்புக் கிடைச்சது... சின்ன கேரக்டர்னாலும் நல்ல கேரக்டர்.

**பிஸினஸ்மேன்:**

'ஸ்ரீ டிரேடிங் ஏஜென்சி'னு நிறுவனத்தை நடத்திக்கிட்டு வர்றோம். ஆடியோ கேசட்டுகள் - சிடிகள் விற்பனை எங்களோட முக்கிய பிஸினஸ்.

**கணவன்:**

எனக்கு இத்தனை முகங்கள் இருக்கறதுக்கு முக்கிய காரணமே என்னோட மனைவி சுஷ்மாதான். அவங்களைத் திருமணம் செய்துக்கணும்ங்கற ஆசையிலதான் என்னை நிறையவே வளர்த்துக்கிட்டேன்.

**- முத்து**



# இளமை கல்கி

லாலிபாப், பூ, வாழ்த்து அட்டை, ஹைக்கூ, வெண்பா, ஈ-மெயில் இத்தனை அனுப்பியும் உங்கள் கேர்ள் பிரண்ட் (அல்லது பாய் பிரண்ட்) கப்பல் கவிழ்ந்ததைப்போல் 'உம்' என்று முகத்தை வைத்துக் கொண்டு தனிமையே கதி என்று கிடக் கிறாரா? அவரை உடனடியாகக் காப்பாற்ற வேண்டியது கட்டாயம், அவசியம். ஏனென்றால், தனிமை ஒரு வியாதியாம்.

தனிமை விரும்பிகளில் பல வகையறாக்கள் உள்ளனர். புல், பூண்டு, குச்சி இவற்றில் எதையாவது ஒன்றை கையில் பிடித்துக் கொண்டு அதையே திருப்பித் திருப்பி பார்த்தபடி நான்கு மணிநேரம் ஒரே இடத்தில் 'ச்சும்மா' உட்கார்ந்திருப்பது ஒரு வகை. மொட்டை மாடி உச்சியில் நின்று கொண்டு வால் நட்சத்திரம், ஜுபிட்டர், பறக்கும் தட்டு என்று ஆகாசத்தை அளந்தபடி மணிக்கணக்கில் பொழுதைக் கழிப்பது இன்னொரு வகை. ஒட்டகச் சிவிங்கி, முள்ளம்பன்றி, கங்காரு என மனிதர்களைத் தவிர அனைத்து ஜீவராசிகளிடமும் மனம் விட்டுப் பேசி, கிச்சு கிச்சு மூட்டி சிரித்து ஜீவகாருண்யத்துடன் இருப்பது மற்றொரு வகை.

இவற்றில் ஏதேனும்

# புதுசா ஒரு ஜுரம்!

சென்னை இளைஞர்களுக்கு, கடும் ஜுரம் ஒன்று அனலாக அடித்துக்கொண்டிருக்கிறது. வெப்ப அளவு அடுத்த இரண்டு மாதத்துக்குச் சற்றும் குறையாதாம். ஏன்? என்னாச்சு?

இந்தியா - ஸ்ரீலங்கா டெஸ்ட் போட்டி, 'சாம்பியன்ஸ்' ஹாக்கி போட்டி, சென்னை ஓபன் ஏடிபி டென்னிஸ் போட்டி மற்றும் பாகிஸ்தான் கிரிக்கெட் லெஜண்டான வாசிம் அக்ரமின் சென்னை வருகை.... என சென்னை, டிசம்பர் - ஜனவரி காலண்டரில் இப்பொழுது ஏராளமான விளையாட்டு உற்சவங்கள்.

ஏடிபி டென்னிஸ் போட்டியான சென்னை ஓபன், வருடா வருடம் டிசம்பர் - ஜனவரி சீஸனில் களை கட்டும். இம்முறை ஜனவரி 2 - 8 வரை சென்னையைக் கலக்க வருகிறது. உலகின் இரண்டாம் நிலை வீரரான நாடல், இருமுறை சென்னை ஓபன் பட்டத்தை வென்ற கார்லஸ் மோயா... என பிரபலங்களின் வருகையால் சென்னை இன்னும் கொஞ்ச நாளில் கிரிக்கெட், ஹாக்கி



ஒன்றின் கீழ் உங்கள் நபர் வருகிறாரா அல்லது அவர் வேறு ஒரு பிரத்தியேக வகையறாவா என்று அலசுங்கள். மனோதத்துவ நிபுணர்கள் சமீபத்தில் கூட தனிமை விரும்பிகளை தீவிரமாக ஆராய்ந்திருக்கிறார்கள். தனிமையாக இருப்பது ஆபத்தானது என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்கிறார்கள். மாரடைப்பு நோய்க்கு கூட இது இட்டுச் செல்லுமாம்.

அப்படியானால் இனிமேல் காலேஜ், ஆபிஸ், லைப்ரரி எங்கே போகவேண்டுமானாலும் யார் கையையாவது பிடித்துக் கொண்டு தான் போகவேண்டும் என்று அர்த்தமில்லை. தனியாகப் போகலாம்.



# ஹைக்கூ டாக்டர்!

'மஜா'வோ, 'சிவகாசி'யோ பார்க்கப் பிடிக்கவில்லையென்றால் மொட்டை மாடிக்குச் சென்று நட்சத்திரம் பார்க்கலாம். ஆனால் 'நீங்கள் உங்களுடன் மட்டுமே சதாசர்வகாலமும் இருந்து விடக் கூடாது.

சிரமப்பட்டு ஹைக்கூவும், வெண்பாவும் எழுதிக்கொண்டு வரும் அந்த அப்பாவி நபர், பரிசுத்த ஆவி, உத்தம ஜீவாத்மா, உங்களுடைய 'வியாதியை' போக்க வரும் மருத்துவராகவும் இருக்கலாம். யோசியுங்கள்.

- மருதன்

யிலிருந்து டென்னிஸ் மூடுக்குத் தாவவிருக்கிறது.

'சென்னை, இந்திய டென்னிஸ் உலகின் தலைநகரம். அமிர்த ராஜ் சகோதரர்கள், ராமனாத கிருஷ்ணன், ரமேஷ் கிருஷ்ணன் என மிகச் சிறந்த வீரர்களை உருவாக்கியுள்ளது. தமிழக அரசும் தனியார் நிறுவனங்களும் கைகோத்து நடத்தும் இப்போட்டி போல மேலும் சில சர்வதேச போட்டிகள் சென்னைக்கு வரவிருக்கின்றன" என்கிறார்கள் தமிழ்நாடு டென்னிஸ் அசோசியேஷன் அதிகாரிகள்.

வழக்கம்போல, இந்த முறையும் லியாண்டர் பயஸூம் மகேஷ் பூபதியும் 'சென்னை ஓபன்'னில் ஆடவிருக்கிறார்கள். இணைந்து அல்ல. தனித்தனியாக.

பரிசுத்தொகை யு.எஸ். டாலர் 400,000 (சுமார் ஒரு கோடியே அறுபது லட்சம்).

ஆனால் உலகின் முதல் நிலை ஆட்டக்காரரான ரோஜர் ஃபெடரர் இந்த 'தம்மாத்துண்டு' தொகைக்கெல்லாம் ஆட முடியாது என்று கூறி விட்டாராம். அடுத்தடுத்த வருடங்களில் பரிசுத்தொகை உயர்த்தப்படும். 2007-ல் ஃபெடரர் வர வாய்ப்புண்டு என்கிறார்கள்.

- பப்பி




# கொலைகாரனின் பாடல்!

**ஸூ**ஃப் - யான் ஸ்டீவன்ஸ் (sufjan stevens) பெயரைச் சொன்னாலே போதும், ஸ்ஸ்ஸ்... ஸோ ஸ்வீட் என உருகிவிடுவர் இன்டர்நேஷனல் இளசுகளெல்லாம். ஸ்டீவன்ஸ் 2005ன் நெம்பர் ஒன் இசை ஆல்பத்தைக் கொடுத்த இளைஞர். முதலிலிருந்தே வருவோம்.

ஸ்டீவன்ஸ் டெட்ராய்டில் 1975-ல் பிறந்தவர். இசையார்வம் கொண்டவர். இசைக்கான வரிகள் அவருக்குத் தானாகவே வரும். பல இசைக் கருவிகளை வாசிக்கத் தெரிந்தவர். 'மார்ஸுகி' என்ற ஹாலந்து நாட்டின் ராக் குழுவில் ஸ்டீவனின் இசைப் பயணம் லாக்-இன் ஆனது. பள்ளி நாட்களிலேயே கம்போஸிங் மற்றும் அதற்கான வரிகள் எழுதுவது ஸ்டீவன்ஸுக்குப் பழகிவிட்டது.

'எ ஸன் கேம்'- ஸ்டீவன்ஸின் முதல் ஆல்பம். நியூயார்க் சிட்டிக்கு வந்த பின் ஸ்டீவன்ஸ் வெளியிட்டது 'என்ஜாய் யுவர் ரேபிட்'. அதன்பின் மேலும் சில ஆல்பங்களை வெளியிட்ட ஸ்டீவன்ஸ் 2004-ன் ஆரம்பத்தில் 'செவன் ஸ்வான்ஸ்' என்ற கிருத்துவ நாட்டுப்புற ஆல்பத்தை வெளியிட்டார். அமெரிக்காவில் உள்ள எல்லா மாநிலங்களைப் பற்றிய பாடல்களை உருவாக்கப் போகிறேன் என ஸ்டீவன்ஸ் அறிவித்த ப்ராஜெக்ட்தான் 'தி பிஃப்டி ஸ்டேட்ஸ் ப்ராஜெக்ட்'அதில் உருவான முதல் ஆல்பம் 'இல்லினாய்ஸ்' தான் அமெரிக்காவையே ஆட்டுவித்துக் கொண்டிருக்கிறது. ஸ்டீவன்ஸ் மிகவும் எளிமை. இசையும் அப்படித்தான்.

**ஊ**ர் ஊராகச் சுற்றித் திரியும் ஒரு நாடோடி, ஒவ்வொரு ஊரிலும் புழக்கத்திலிருக்கும் மாறுபட்ட மற்றும் கெட்ட விஷயங்களைக் கூட நல்ல விதமாகத் தன் பாடல்களில் கூறிச் செல்லுவதாக அமைந்த பாடல்கள் இந்த ஆல்பத்தில் இடம் பெற்றிருக்கின்றன. பழைமை கலந்த, மேற்கத்திய நாட்டுப்புறத் தன்மை மிகுந்த இசையால் பாடல்கள் சூப்பர் ஹிட் ஆனது.

ஸ்டீவன்ஸ் ஒரு மேற்கத்திய கிராமியப் பாடகர் என்பது பொதுவான கருத்து. ஆனால் உண்மையில் அப்படியில்லை. Illinois ஆல்பத்தில் ஒவ்வொரு நிலப்பரப்பின் கலாசாரங்களை, நிகழ்வுகளை விளக்குவதோடு மட்டுமின்றி, பல்வேறு மனிதர்களின் உணர்வுகளையும் பிரதிபலிக்கிறது.

வேனில் அழுது கொண்டிருக்கும் சிறுவன், கேன்சரால் பாதிக்கப்பட்ட ஒரு சிறுமி, வளர்ப்பு அம்மாக்கள், ஊர்வலங்கள், அதிபர், ஐக்கிய உணவுக் கழகம் (UFO), கோதுமையின் க்ரீம், இரவு நேர ரயில், தொடர் கொலைகாரன், பைபிள் வாசித்தல், இதெல்லாம் என்னவென்று கேட்கிறீர்களா! இந்த ஆல்பத்தில் இடம் பெற்றுள்ள பாடல்களின் தீம்தான். அதில் முக்கியமானது தொடர் கொலைகாரன் ஜான் கேஸியைச் சந்தித்து உருவாக்கிய பாடல்.

**இ**ந்த ஸ்டேட்ஸ் ப்ராஜெக்டின் அடுத்த ஆல்பங்கள் 'ஆரிகன்', 'ரோட் ஐலேண்ட்'. எப்பொழுது வருமென இசை ரசிகர்கள் கிறங்கிப் போய் காத்திருக்கிறார்கள்.

- **முகில்**

* 'ஹலோ என் ஃபோட்டோவை ஏன் வைச்சீங்க?'

டாம் & ஜெர்ரி சண்டை மாதிரி தான் உலகம் முழுகும் மாமியார் - மருமகள் சண்டை. ரோட்டோரமா வாழுற குடும்பம்னாலும் சரி, பெரிய அரண்மனையில் வாழுற அரச குடும்பம்னாலும் சரி, கரப்பான்பூச்சி மாதிரி எங்கெங்கும் இருக்கும் மாமியார் - மருமகள் சண்டை. 'இ'ல ஆரம்பிச்சு 'ந்து'ன்னு முடியுற ஆறெழுத்து நாட்டோட குயினுக்கு புதுசா யங் அரசர் கண்ணாலம் பண்ணிருக்கிற நீண்ட நாள் காதலிகூட 'டெர்ம்ஸ்' ஒத்துப்


* 'மரக்க வாஷ்'

# என் ராஜ்ஜியத்தின் அவுட்சைடில்!

போகலையாம். அரண்மனைக்குள்ளேயே பயங்கர புகைச்சலாம். பொதுவா நம்ம 'குயின் குடும்பம்' குதூகலமா இருக்கணும்னு சர்ச்ல குயின் குடும்ப உறுப்பினர்களோட பேரை எல்லாம் வாசிச்சு பிரார்த்தனை பண்ணுவாங்களாம். அதுல இதுவரை 'லாகமி' பேரைச் சேர்க்கவே இல்லையாம். இந்த விஷயத்துல என்ன பண்ணன்னு தெரியாம விழி பிதுங்கி நிக்காராம் யங் அரசர்.

'அவரு மாதிரி பித்தலாட்டக்காரரு யாருமே கெடையாது. தலைமைப் பதவி, அதிகாரத்தை வெச்சுக்கினு இந்தியாவுக்கு சாதகமா மேட்ச்சோட முடிவு அமையறாப்ல கிரவுண்டை செட் பண்ணச் சொல்லி வற்புறுத்துவாரு. என்னா வில்லத்தனம்! டாசு போடறப்ப கூட சரியா மூஞ்சைக் காண்பிச்சு பேச மாட்டாரு'. இப்படி எக்ஸ் கேப்டனைப் பத்தி எடக்கு மடக்கு வரிகளோட 'என் ராஜ்ஜியத்தின் அவுட் சைடில்'னு ஒரு புக் வந்திருக்கு. எழுதுனவரும் லேசுப்பட்டவரில்ல. அவரும் கங்காரு நாட்டோட எக்ஸ் கேப்டன்தான். எப்படியும் நம்ம எக்ஸ் வெகு சீக்கிரமாவே ஒரு சர்ச்சைக்குரிய புக்கை வெளியிடுவாருன்னு நெனைக்கிறேன். 'ஆஃப் தி ரெகார்ட்'டா நடந்ததெல்லாம் அதுல 'ஆப்பு ரெகார்ட்டா' பதிவாகும்னு தாராளமா நம்பலாம்.

'கை' தலைவிக்கு எதிரா பாரதிய கட்சியில இருந்து காய் நகர்த்துற அக்கா (மூணெழுத்து 'கா') தன் பையனை எம்.பி. ஆக்குறதுல தீவிரமா இருக்காராம். போன லோக்சபா தேர்தலிலேயே சித்திக்கு எதிரா பிரச்சாரத்துல பட்டையைக் கௌப்புன 'மழைக் கடவுள்' காந்திக்கு வயசு இப்போ இருபத்தஞ்சை தாண்டிடுச்சாம். ம.பி. இடைத் தேர்தல்ல நிக்கலாம்னு பேச்சு பெரிசாயிக்கிட்டே வருது. ஏற்கெனவே அங்க செல்வாக்கோட இருக்குற பாரதிய கட்சியில இருந்து கழட்டிவிடப்பட்ட லேட்டஸ்ட் சண்டைக்கோழிதான் பெரும் சவாலா இருக்கும்னு கட்சிப் பெருசுங்க பேசிக்கறாய்ங்க. இன்னொரு சூப்பர் குஸ்தி ஆரம்பமாகப் போகுது டோய்!



சின்னான்

கிசுகிசு செய்திகள்

# கல்கி விழா

வருண பகவான் சற்றே கருணை காட்டினார். நமக்காக இல்லாவிட்டாலும் காலத்தினால் அழியாத படைப்புகளை உருவாக்கிய அமரர் கல்கிக்காக கருணை காட்டினார் என்று கூடச் சொல்லலாம். ஆழ்வார்பேட்டை ஆஸ்திக சமாஜத்தில் அமரர் கல்கி



• நூல்கள் வெளியீடு

நினைவு நாள் நிகழ்ச்சி நடைபெற்ற டிசம்பர் ஐந்தாம் தேதிக்கு இரண்டு நாள் முன்னதாக ஆஸ்திக சமாஜம் தெப்பக் குளமாகக் காட்சியளித்தது.

பல்லாண்டுகள் பக்தி வெள்ளத்தில் மூழ்கிய அரங்கம் அன்று, பெருமழையினால் ஏற்பட்ட வெள்ளத்தில் மூழ்கி இருந்தது. மோட்டார் பம்ப் கொண்டு வந்து, தண்ணீரை வெளியேற்றியதில் நிகழ்ச்சி சிறப்பாக நடந்தது.

'எத்தனை தமிழ் உண்டு?' என்று கேட்டால், பெருக என்றால், முத்தமிழ் என்பீர்கள். சிறுக என்றால், கொங்கு தமிழ், நெல்லைத் தமிழ், சென்னைத் தமிழ் என்று பட்டியலிடுவீர்கள். ஆனால் யூகால் நிறுவன தலைவர் கார்த்திக் நாராயணனின் கணக்குப்படி ஐந்து தமிழ்! சமஸ்கிருதம் கலந்த தமிழ், பிற மொழி கலப்படமற்ற தூய தமிழ், (டீ.விகளில் தொகுப்பாளினிகள் பேசுகிற) ஆங்கிலம் கலந்த தமிழ், சாமானிய தமிழர்களுக்குப் புரியாத (மொழிபெயர்ப்பு) தமிழ்... உதாரணமாக, 'விரல் தட்டைக்கட்டை' என்றால் என்ன தெரியுமா? கம்ப்யூட்டர் கீபோர்டுதான் இப்படி



• பார்வையாளர்களில் ஒரு பகுதி...

யாகத் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. கடைசியாக அனைவரும் ரசிக்கும் ஜனரஞ்சகமான கல்கியின் தமிழ்.

# ஐந்தாவது தமிழும்

இப்படித் தமிழ் வகை மாதிரிகளைப் பட்டியலிட்ட கார்த்திக் நாராயணன், அமரர் கல்கியின் பொன்னியின் செல்வனை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தவர். அமரர் கல்கி நினைவு அறக்கட்டளை நடத்திய கல்கி நினைவு நாள் நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கி, கல்கியின் இரண்டு புத்தகங்களை வெளியிட்டார்.

முதல் புத்தகம் 'படித்தேன், ரசித்தேன்' நாவல்கள், சிறுகதைகள், தலையங்கங்கள், சங்கீத, நாடக, திரைப்பட விமர்சனங்களைப் போல கல்கி, பல நூல்களுக்கு முன்னுரையும் மதிப்புரையும் எழுதி இருக்கிறார். படைப்பிலக்கியங்களுக்கு ஈடான சுவையும் சூடும் கொண்ட முன்னுரை, மதிப்புரைகளின் தொகுப்புதான் இந்தப் புத்தகம்.

இன்று பெண்ணுரிமை, பெண்களின் கருத்துச் சுதந்திரம் எல்லாம் பெரும் சர்ச்சையை ஏற்படுத்திக் கொண்டிருக்கின்றன. எழுபது ஆண்டுகளுக்கு முன்பு, பெண்களின் பிரச்னைகள், உரிமைகளைப் பற்றி சமூக உணர்வுடன் நகைச்சுவையும் மிளிர கல்கி எழுதினார். அத்தகைய கட்டுரைகளின் தொகுப்பு தான் 'பெண் தெய்வங்கள்' என்ற புத்தகம்.

* அனிதா - இறைவணக்கம்!



'படித்தேன்... ரசித்தேன்' புத்தகம் உருவாகக் காரணமாக இருந்த ஒரு சம்பவத்தை விவரித்தார் கல்கி ராஜேந்திரன். 'ஒருமுறை 'ஹிந்து' நாளிதழ் ஆசிரியர் ராம் உடன்



* விழா நாயகர்

பேசிக் கொண்டிருந்தபோது, அவர், "ஆர்.கே. நாராயணனின் புத்தகம் ஒன்றுக்கு கல்கி முன்னுரை எழுதியிருக்கிறாரே! உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டார். "தெரியாதே!" என்றேன். அடுத்த சில தினங்களில், அதன் பிரதியையும் அனுப்பி வைத்து உதவினார்" என்று நினைவு கூர்ந்த கல்கி ராஜேந்திரன், "இதுவரை புத்தக உருப்பெறாமல் இருந்த கல்கியின் இந்த எழுத்துக்களை மிகவும் கஷ்டப்பட்டு சிரத்தையுடன் தொகுத்திருக்கிறார் சுப்ர. பாலன். இவரை 'பொன்னியின் புதல்வரது இன்னொரு புதல்வர்' என்றாலும் பொருத்தமாக இருக்கும்" என்று

# அசத்தல் விழாவும்!

பாராட்டினார்.

அமரர் கல்கியின் இரு புத்தகங்களையும் கார்த்திக் நாராயணன் வெளியிட டாக்டர் சுதா சேஷய்யன் முதல் பிரதிகளைப் பெற்றுக்கொண்டார். கார்த்திக் நாராயணன் தமது மொழிபெயர்ப்பு அனுபவங்களை விவரித்தார்:

"ஒருநாள் நண்பர்களுடன் இலங்கையில் நிலவும் சூழ்நிலை குறித்துப் பேசிக்கொண்டிருந்தபோது, இலங்கைக்கும், தமிழ்நாட்டுக்கும் இரண்டாயிரம் வருடத் தொடர்பு உண்டு என்று



* 'வானதி' திருநாவுக்கரசுக்கு சால்வை மரியாதை...

விளக்கிச் சொன்னேன். 'எப்படி இதெல்லாம் தெரியும்?' என்று கேட்டார்கள். நான் சரித்திர ஆராய்ச்சியாளர் இல்லை. கல்கியின் பொன்னியின் செல்வனில் இந்த விவரங்கள் எல்லாம் இருக்கின்றன'' என்றேன்.

அப்போதுதான், பொன்னியின் செல்வனை, தமிழ் தெரியாதவர்களும் படித்து, ரசிக்கத்தக்க வகையில் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும் எண்ணம் வந்தது. கல்கி ராஜேந்திரனிடம் அனுமதி கேட்டேன்.

'உங்களால் முடியுமா?' என்றார்.

'கஷ்டமான பணிதான்! இருந்தாலும் முயற்சி செய்ய ஆர்வமாக இருக்கிறேன்' என்றேன்.

''சரி! இரண்டு அத்தியாயங்களை மொழிபெயர்த்துப் பாருங்கள். அதன்பின் முடிவு செய்யலாம்'' என்றார்.

தமிழ்க் கதையை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தது போன்ற உணர்வே வாசகருக்கு வரக்கூடாது. ஆங்கிலத்திலேயே எழுதப்பட்டது போன்ற உணர்வை ஏற்படுத்த வேண்டும்' என்ற கொள்கையோடு, முதல் இரண்டு அத்தியாயங்களை மொழி பெயர்த்து கல்கி ராஜேந்திரனிடம் அளித்தேன்.

சில தினங்களில், '90% நன்றாக இருக்கிறது. ஒரு சிலரிடம் கொடுத்து, படிக்கச் சொல்லி, மேலும் மெருகூட்ட ஆலோசனை கேளுங்கள்' என்று கடிதம் எழுதினார்.

பொன்னியின் செல்வனை முழுமையாக உள் வாங்கிக்கொண்டு, மொழி பெயர்த்து, மெருகூட்டி 2500 பக்கங்கள் கொண்ட ஐந்து பாகங்களை முடிக்க எனக்கு மூன்றாண்டுகளானது'' என்றார் கார்த்திக் நாராயணன்.

வெளியிடப்பட்ட புத்தகங்களை அறிமுகம் செய்து பேசிய டாக்டர், சுதாசேஷய்யன், மொழி பெயர்ப்பில் உள்ள சவால்களைச்



* இன்னொரு புதல்வர்...

சுட்டிக் காட்டினார்.

''கல்கி பிறந்ததில் தமிழ் நாட்டுக்கு மகிழ்ச்சி; அவர் எழுதியதில் தமிழுக்கு மகிழ்ச்சி. அவரது புத்தகங்களின் முதல் பிரதிகளைப் பெற்றுக் கொள்வதில் எனக்கு மகிழ்ச்சி'' என்று சொல்லி சந்தோஷப்பட்டவர் இரண்டு புத்தகங்களிலிருந்தும், கல்கியின் எழுத்துக்களை மேற்கோள் காட்டி சுவையாக உரையாற்றினார். அவற்றில் உள்ள சிந்தனைகள்



* சொக்க வைத்த சேர்ந்திசை

இன்றைக்கும் பொருத்தமாக இருப்பதைச் சுட்டிக் காட்டினார்.

கல்கி குறித்து தமது ஆதங்கம் ஒன்றையும் வெளிப்படுத்தினார் சுதா சேஷையன்! நந்தினி, வானதி, சிவகாமி போன்ற அற்புதமான அழகான பெண்களைப் படைத்த கல்கி, தமிழ்நாட்டுப் பெண்கள் கேரளம், சிந்து, காஷ்மீரம் போன்ற பிற மாநிலப் பெண்கள் அளவுக்கு அழகானவர்களில்லை என்று குறிப்பிட்டிருப்பதைச் சுட்டிக்காட்டி, ''அதனை தம்மால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை! கல்கி, பின்னாளில் தமது கருத்தை மாற்றிக் கொண்டதாகவும் தெரியவில்லை!'' என்றார்.

இதற்கு விளக்கம் அளித்த கல்கி ராஜேந்திரன், ''தமிழ்நாட்டுப் பெண்கள், குறித்து இவ்வாறு எழுதிய பின்னரே கல்கி, வானதி, நந்தினி, சிவகாமி அனைவரையும் படைத்தார். அதிலிருந்து, அவர் தமது கருத்தை மாற்றிக் கொண்டிருப்பார் என்றே முடிவுக்கு வரலாம்'' என்றார்.

இறைவணக்கம் பாடிய அனிதா, தொகுப்பாசிரியர் சுப்ர. பாலன், புத்தகங்களுக்கு அட்டைப்பட ஓவியம் தீட்டிய ஓவியர்கள் ஹரீஷ் குகன், ஷ்யாம் மற்றும் பதிப்பாளர் வானதி திருநாவுக்கரசு ஆகியோர் கௌரவிக்கப்பட்டனர்.

நிகழ்ச்சியின் இறுதிக்கட்டமாக 'பிருந்தாவனத்தில் கண்ணன் வளர்ந்த' என்ற தலைப்பில் சேர்ந்திசை வழங்கினார்கள், சிறுவர், சிறுமியர். திருமதி சுலோசா பட்டாபிராமனின் இசைக் கோப்பில சாஸ்த்ரீயமான பாடல்களை ஒரு குரலில் இசைத்து பிரமிப்பூட்டினார்கள். அமரர் கல்கி எழுதிய 'மீரா' படப் பாடல்கள் உள்ளிட்ட பல்வேறு பக்திப் பாடல்களால் களிப்பூட்டினார்கள். வயலின், குழல், மூன்று மிருதங்கங்கள், ஜால்ரா, சிப்ளா என்று கிருஷ்ண பக்தியில் மிதந்தது ஆஸ்திக சமாஜம்!



* ஓவியர் ஷ்யாமுடன்



* ஓவியர் ஹரீஷ், கார்த்திக் நாராயணன்

தொகுப்பு: **எஸ். சந்திரமௌலி**

படங்கள்: **ஸ்ரீஹரி**



# ABCD

ஹீரோ மீது மூன்று இளம் பெண்களுக்குக் காதல். ஹாலிவுட் பாணியிலான கதை முடிச்சு. அதே சமயம் பெண்ணியக் குரலைக் தூக்கிப் பிடிக்கும் பாலசந்தர் இல்லாத குறையைக் கொஞ்சமாவது ஈடு செய்யலாம் என்று இயக்குனர் நினைத்திருப்பார் போலும்.

வரதட்சணையை எதிர்பார்த்து வாழ்க்கையைத் தொடங்க நினைக்கும் மாப்பிள்ளையைத் தூக்கி எறியும் பாரதி (நந்தனா), கற்பூர ஆரத்தியில் சிகரெட் கொளுத்தி அதே புகையிலை நெருப்பால் சுடும் கொடுமைக்காரக் கணவனை இழந்து கைம் பெண்ணாய் நிற்கும் சந்திரா (சினேகா), பணியிடங்களில் பாலியல் ரீதியான அச்சுறுத்தலுக்கு ஆளாகும் டெய்சி (அபர்ணா), பெண்களைத் தாய்மையாகப் பார்க்கும் அப் பழுக்கற்ற மனிதரான ஆனந்த் (ஷாம்), இந்த நான்கு கதா பாத்திரங்களும் ஒரே நேர்கோட்டில் சந்தித்துக் கொள் வதுதான் ஏ.பி.சி.டி.

ஸ்னேகாவுக்கு இது கனவுப் பாத்திரம். அசத்தியிருக் கிறார். ஆனால் ஷாம் இறுக்கமான முகத்தோடு அடித் தொண்டையில், கம்மிய குரலால் பேசி படுத்து கிறார்.

டி.இமானின் பாடல்கள் 'மஞ்சள் முகமே' டாப். சின்னச் சின்னத் துண்டு பாடல்கள் ஆங்காங்கே தூவி விடப்பட்டிருப்பதால், உணர்ச்சிகளைக் கிளர்ந்தெழச் செய்யும் அற்புதத்தை படம் அடிக்கடி நிகழ்த்துகிறது.

வடிவேலுவின் காமெடி பெரிய ஆறுதல். இயக்குனரும் அவரது தந்தையும் சினேகாவின் கணவராகவும் தந்தை யாகவும் நடித்துள்ளனர். இந்த உரிமையில் ஒரு காட்சியில் உணர்த்தியிருக்க வேண்டியவற்றை படம் முழுக்கத் தெளித்திருப்பது வீண். ஒளிப்பதிவும் கலையும் கதாபாத்திரங் களின் வாழ்க்கைச் சூழலை அழகாகக் காட்டியுள்ளன.

திரைக்கதையில் ஏ டு இசட் பாராட்டும்படி இல்லாவிட் டாலும் மனதுக்கு ஒத்தடம் தருகிற கதையையும் பாத்திரங் களையும் பாராட்டாமல் இருக்க முடியாது.

- லஜ்ஜாவதி

# மங்கையர் மலர்

## திருமண மலர்

### பயனடைந்தவர்கள் பாராட்டு!





அனுராதா - ரங்கராஜன்

ஆர்.ரங்கராஜன்
மேற்கு மாம்பலம் சென்னை-33

நாங்கள் பல வருடங்களாகப் படித்து வரும் பாச மலரான மங்கையர் மலர் இதழில் எங்களது பெண் அனுராதாவிற்காக திருமண விளம்பரம் கொடுத்திருந்தோம். அதற்கு நாலா பக்கங்களிலிருந்தும் வரன்கள் வந்து குவிந்தன. அவர்களில் எங்கள் மனதுக்குகந்த திரு.ரங்கராஜனை நிச்சயம் செய்து திருமணமும் விமரிசையாக சென்னையில் நடந்தேறியது.

எங்கள் மங்கைக்கு ஏற்ற நல்ல மணாளனைத் தேர்ந்தெடுக்க உதவிய 'வாழ்க்கை தரும் மலரான' மங்கையர் மலருக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். இதுபோல் எல்லோருக்கும் மங்கையர் மலர் ஒரு 'வாடாத மலராகவும்', 'வசந்த மலராகவும்', 'ராசி மலராகவும்' அமைய இறைவனை வேண்டுகிறோம்.

இப்படிக்கு,
ஆர்.ரங்கராஜன்

**அனைத்து இல்லங்களையும் அலங்கரிக்கும் மங்கையர் மலரின் திருமண மலர் பகுதியில் நீங்களும் விளம்பரம் செய்து பயனடையலாமே!**

**உடன் அணுகவும் :**

மானேஜர், திருமண மலர் பகுதி, கல்கி பில்டிங்க்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032
தொலைபேசி : 2225 1522 / 0623 / 1324 தொலைநகல் : 044-2225 1021
மங்கையர் மலர் இன்டர்நெட் முகவரி : www.mangayarmalaronline.com

**திருமண மலர் விளம்பரக் கட்டணம்**

| | |
|---|---|
| முதல் 30 வார்த்தைகளுக்கு | ரூ.400.00 |
| 30க்கும் மேற்பட்ட வார்த்தை ஒவ்வொன்றுக்கும் தலா | ரூ. 15.00 |
| வண்ணத்தில் 'ஹை லைட்" செய்து வெளியிட | ரூ.100.00 |

*கட்டணத்தை நேரில் ரொக்கமாகவோ / சென்னை காசோலையாகவோ / வெளியூர் டிமாண்ட் டிராப்டாகவோ* **'மங்கையர் மலர்'** *என்ற பெயரில் எடுத்து அனுப்பலாம்.*

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 / 03 - 05 * Registered as a Newspaper in Srilanka.

